(சு-ரை) தனக்கென ஒருபயனை நாடாதபெரியோர்கள் கண்ட கண்டவிடங்களிற்றிரியினும் திரிவர், அசைவற்றிருப்பினு மிருப்பர், உண்ணினும் உண்பர், உண்ணாதிருப்பினுமிருப்பர், பேசினும் பேசுவர், பேசாதிருப்பினுமிருப்பர், பிதாவைப் போலிருப்பினுமிருப்பர், புத்திரனைப் போலிருப்பினு மிருப்பரென்பதாம். ஒரு தன்மை கூறவே அதற்கினமான வேறுதன்மையினையும் கூட்டி யுரைத்தல் சம்பிரதாயமாம். (35)

விடக்கே பருந்தின் விருந்தே கமண்டல வீணனிட்ட
முடக்கே புழுவந் துறையிட மேநல முற்றுமிலாச்
சடக்கே கருவி தளர்ந்துவிட் டாற்பெற்ற தாயுந்தொடாத்
தொடக்கே யுனைச்சுமந் தேனின்னி னேது சுகமெனக்கே.

(பொ-ரை.) மாமிசபிண்டமே! பருந்துண்பதற்கேற்ற விருந்தே கமண்டலத்தினையேந்திய வீணனாகியபிரமன் சிருஷ்டித்த வளையே! கிருமிகள் வாசம் செய்யுமிடமே! நன்மையென்பது சிறிதுமில்லாவுடலே! நரம்புதளர்ந்து பிணமாய் விடில் ஈன்றெடுத்த அன்னையும் நெருங்காத சம்பந்தமுடைய பொருளே! உன்னை யிதுகாறுந் தாங்கினேன் உன்னாலேது சுகமெனக்குண்டு.

(சு - ரை.) உலகிலெவ்வொருவரும் ஒருபொருளைப் பரிப்பது அப்பொருளால் பின்னொருகாலத்தில் ஒருநன்மையினையடையலாமெனக்கருதியேயாம். உடலாகியநீ உனக்குரிய மனம்வாக்குகாயங்களால் இன்றியமையாது செய்யவேண்டிய சிவத்தியானமும் சிவதோத்திரமும் சிவபூசையு முறையேசெய்யாது வாழ்ந்தாயாதலின், உன்னைச்சுமந்து திரிந்ததினாலே என்னப்பிரயோசனங் கண்டேனென்பார், நின்னினேது சுகமெனக்கே என்றனர். (36)

அழுதாற் பயனென்ன நொந்தாற் பயனென்ன வாவதில்லை
தொழுதாற் பயனென்ன நின்னை யொருவர் சுடவுரைத்த
பழுதாற் பயனென்ன நன்மையுந் தீமையும் பங்கயத்தோ
னெழுதாப் படிவரு மோசலி யாதிரென் னேழைநெஞ்சே.

(பொ-ரை.) அறியாமையினையுடைய மனமே! ஒரு துன்பம் வந்தடைந்த காலத்தில் அழுதலினாலே என்னப் பிரயோசனம், அப்போது துக்கித்தலினாலே யென்னப்பிரயோசனம், உன்னை வேறொருவர் மனநோகச் சொல்லினும் குற்றத்தைச் சிந்திப்பதி லென்ன, இவற்றாலாவது ஒன்றுமில்லை பிரமனெழுதிய தலைவிதிப் படியல்லாது விளையுமோ இவற்றிலொன்றினுக்கும் சலியவேண் டுவதில்லை.

(கு-ரை.) அவரவர்கள் பூர்வஜென்மத்திற்குத் தக்கபடி சிவாஞ் ஞையை மேற்கொண்டு பிரமன் விதித்தவற்றை யநுபவித்துத் தீர வேண்டுமேயன்றி அதுபற்றி விசனமுதலியவற்றை அடைதலினால் சிறிதும் பிரயோசனமில்லையென்பார் 'ஆவதில்லை' என்றனர்.(39)

ஊரீ ருமக்கோ ருபதேசங் கேளு முடம்படங்கப்
போரீர் சமணைக் கழுவேற்று நீற்றைப் புறந்திண்ணையிற்
சாரீ ரனந்தலைச் சுற்றத்தை நீங்கிச் சகநகைக்க
வேரி ருமக்கவர் தாமே தருவ ரிணையடியே.

(பொ-ரை.) ஓ ஊரிலுள்ளவர்களே! உங்கட்கொரு உபதேசம் செய்கிறேன் (கவனமாய்க்) கேளுங்கள், (உங்களுடைய)தேகமுழு வதும் (மதுரையின்கண்ணே) சமணர்களைக்கழுவிலேற்றிய திருநீற் றினைப் பூசிக்கொள்ளுங்கள், (உங்களுடைய) சுற்றத்தினர்களினின் றும் பிரிந்து( பொதுவாயுள்ள ) வெளித்திண்ணைகளில் சிவயோக

நித்திரைசெய்து கொண்டிருங்கள், உலகம்சிரிக்கச் சிவவேடமாகிய அழகினைக் கொள்ளுங்கள் (இங்ஙனஞ்செய்யின்) அப்பரமசிவமே அவருடைய இரண்டு திருவடிகளைத் தந்திடுவர்.

(கு-ரை.) திருவெண்காடர் தாம் அனுபவித்துவரும் சாதனத்தினை உலகத்தாருக்கு தெரிவித்து உய்யும்பொருட்டுக் கருணைமிகுதியால் உபதேசித்தருளினர். மதுரையின் கண்ணே கூன்பாண்டியனுக்குச் சுரநோயுண்டாக அப்பாண்டியன் ஆசிரியர்களாகிய சமணமுனிவர்கள் பெரும்பிரயத்தனத்தால் தீராதிருக்க, திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் எழுந்தருளி "மந்திரமாவதுநீறு" என்ற திருப்பதிகத்தேவாரத்தைப்பாடி விபூதியிட்டு அச்சுரநோயைத்தீர்த்து அப்பாண்டியனையும் சைவனாக்கினர். தோல்வியடைந்த சமணர்களைப் பாண்டியன்கழுவேற்றினன். அக்குறிப்பினை விளக்கி விபூதியின் மகிமையினை விளக்குவான் 'சமணைக்கழுவேற்று நீற்றை' என்றனர். (57)

நீற்றைப் புனைந்தென்ன நீராடப் போயென்ன நீமனமே
மாற்றிப் பிறக்க வகையறிந் தா யில்லை மாமறைநூல்
ஏற்றிக் கிடக்கு மெழுகோடி மந்திர மென்னகண்டாய்
ஆற்றிற் கிடந்துந் துறையறி யாம லலைகின்றதே.

(பொ-ரை.) மனமே! விபூதியினைத் தரித்தென்ன (கங்கை முதலிய ஆறுகளில்) தீர்த்தமாடுதற்குப் போயென்ன (எடுத்தவுடலைமாற்றி) ஞானவானாய்ப்பிறக்க நல்லவகைதெரிந்து கொண்டாயில்லை, பெரியவேதங்களில் எழுதிக்கிடக்கும் அனேக கோடான கோடி மந்திரங்களின் (உண்மையினை) என்னவென்று தெரிந்தாய்; பிரபஞ்ச நதியிலேயிருந்து (திருவருளின்) துறைதெரிந்து கொள்ளாமல் அலைகின்றனை.

(த-ரை.) பிரபஞ்சத்தின் கண்ணே மாயாபோக விஷயங்களிற் கட்டுண்டு அதிலேயே யழுந்திக்கிடப்பவர்கட்கு, விபூதியினாலும், புண்ணிய தீர்த்தங்களினாலும் பிரயோசனமில்லை யென்றனர். ஆகவே சாதனங்களை அன்புடனே செய்யவேண்டுமென்பதாம். (39)

ஓங்கார மாய்நின்ற வத்துவி லேயொரு வித்துவந்து
பாங்காய் முளைத்த பயனறிந் தாற்பதி னாலுலகு
நீங்காம லீங்கி நிறையா நிறைந்து நிறையுருவா
ஆங்கார மானவர்க் கெட்டாக்கனிவந் தமர்ந்திடுமே.

(பொ-ரை.) பிரணவசொரூபமாகிய பொருளினிடத்தே ஒப்பற்ற (நாதமெனும்) விதையானது அழகாக உற்பவித்த பிரயோசனத்திலே யிருக்கினும் அறிவிலே தோன்றுதபடி நீங்கி, மாயா விஷயங்களில் நிறையாமல் (திருவருளி) னிறைவில் நிறைந்து வியாபகமாய் அகங்கார சொரூபிகட்கு எட்டாத சிவமாங்கனியானது கிடைக்கப்பெறும்.

(த-ரை.) பிரணவத்தின் கண்ணே நாத மாத்திரமா யெழுந்த உண்மையினை விசாரித்தால் பிரபஞ்சசொரூபம் தோன்றாது அந்நாதத்திற்குக் காரணமாகிய சிவபெருமான் வெளிப்பட்டருளுவனென்பதாம். சுதந்தரவீனமுடையார்க்கே இப்பேறு உண்டாமென்பார் 'ஆங்காரமானவர்க்கெட்டா' என்றனர். (40)

விதியார் படைப்பு மரியா ரளிப்பும் விபன்கபிலைப்
பதியார் துடைப்புநம் பாலணு காது பரானந்தமே
கதியாகக் கொண்டுமற் றெல்லாந் துயிலிற் கனவெனநீ
மதியா திருமன மேயிது காணன் மருந்துனக்கே.

(பொ - ரை.) மனமே! பிரமனுடைய சிருஷ்டிப்பும், விண்டுவினுடைய இரட்சிப்பும், பெருமை பொருந்திய கயிலைப்பெருமான் சங்காரமும், நம்மிடத்து நிகழாது சிவானந்தமே துணையாகப்பெற்று, மற்றப்பிரபஞ்ச போகமனைத்தும் தூக்கத்திற்கண்ட கனாப்பொருள்களைப் போலக் கருதாமலேயிரு, இதுவே உனக்கு நல்லமருந்தாகும்.

(கு-ரை.) பிரபஞ்ச காரியங்களைத் துச்சமெனக் கழித்துத் திருவருளையே ஆதாரமாகக்கொண்டு சிவானந்தத்தினை நாடியிருப்பவர்கள் முத்தொழிலிற் கட்டுப்படார்கள். அங்ஙனமுத்தொழிலிற் கட்டுப்படுதற்கேதுவாயுள்ள வினைநோயை நீக்குதற்கு இச்சாதனமேமருந்தாம். (41)

நாய்க்குண்டு தொண்டு நமக்குண்டு பிச்சை நமனைவெல்ல
வாய்க்குண்டு மந்திர பஞ்சாட் சரமதி யாமல்வரும்
பேய்க்குண்டு நீறு திகைப்புண்டு நின்ற பிறவிப்பிணி
நோய்க்குண்டு தேசிகன் றன்னருணோக்கங்க ணோக்குதற்கே.

(பொ - ரை.) நாயானது (வீடுதோறும் பொருந்தித்தின்பதற்கு) எச்சல்இலை உளது, நமக்கு (ஊரார் இடுகின்ற) பிச்சைசோறு உளது, இயமனை செயிப்பதற்குப் பஞ்சாட்சர மகாமந்திரம் வாயிலுளது, மதியாமல் (எதிர்த்துவருகின்ற) பேயினை ஓட்டுதற்கு விபூதியுளது, பிரமிப்பை யடையச்செய்கின்ற ஜென்மநோயாகிய பிணிக்கு ஆசிரியனுடைய திருவருணோக்கமானது நம்மை நோக்குதற்கு உளது.

(கு-ரை.) நாய்க்கு எச்சிலை வீதிகடோறும் (இலைசாகக்கிடப்பதுபோலப் பிச்சைச்சோறும் நமக்குக்கிடைக்குமென்பார் நாயைக் குறித்தனர், பஞ்சாட்சரமகாமந்திரம் செபித்தாலன்றி எமபயம் நீங்காதென்பார். நமனைவெல்ல வாய்க்குண்டு மந்திரபஞ்சாட்சரம்

என்றனர். சாட்சி மார்க்கண்டேயர். ஔவையார். 'சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்கு, அபாய மொருநாளு மில்லை—உபாயம், இதுவே மதியாகு மல்லாதவெல்லாம் விதியேமதியாய்விடும்,' என்றதனுற் காண்க. எத்தகைய சமயத்தினரும் பேயாற் பிடியுண்டார்க்கு விபூதிப்பிரயோகமே செய்யவேண்டு மென்பார் 'பேய்க்குண்டு நீறு' என்றனர். எனவே, சிவனடியார்கட்குப் பேய்ப்பிடிப்பும் எமபயமு மிராதென்பதாயிற்று. (42)

நேமங்க ணிட்டைகள் வேதங்க ளாகமநீதிநெறி
யோமங்க டர்ப்பணஞ் சந்தி செபமந்திர யோகநிலை
நாமங்கள் சந்தனம் வெண்ணீறுபூசி நலமுடனே
சாமங்க டோறு மிவர்செய்யும் பூசைகள் சர்ப்பனையே.

(பொ-ரை.) நியமங்களை யனுஷ்டித்தல்களும், தியானம் கூடுதலும், வேதங்களைப் பாராயணஞ் செய்தலும், ஆகமங்களை யோதுதலும், (இந்நூல்கள்) சொன்னபடி, நியாய வழியிலிருத்தலும், ஓமங்கள் வளர்த்தலும், தர்ப்பணம்புரிதலும், சாந்தி நடத்தலும், செபம் பண்ணுதலும், மந்திரம் செபித்தலும், யோகநிலை கூடுதலும், தெய்வப் பெயர்களைச் சொல்லுதலும், சந்தனம் விபூதி தரிப்பித்தலும், நன்மையாகவே நாள் முழுவதும் இத்தகையர்புரியும் பூசைகளும் வஞ்சனையாகவே முடியும்.

(கு-ரை.) மனத்தினை யொருவழிப்படுத்தி வேறுசிந்தனை சிறிதுமின்றி மேற்சொன்னவற்றைச் செய்யின் பலனுண்டாமேயன்றி மனத்தினைப் பலவழியிலலையவிட்டு என்ன செய்யினும் சிறிதும் பிரயோசனமில்லை யென்பார் 'சர்ப்பனையே' என்றனர். இவ்வாசிரியரே "கையொன்றுசெய்ய விழியொன்று நாடக்கருத்தொன்றெண்ணப், பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால்கமழும், மெய்யொன்றுசார செவியொன்று கேட்க விரும்புமியான், செய்

கின்ற பூசையெவ்வாறு கொள்வாய் வினைதீர்த்தவனே" என்றதனுற் காண்க. (43)

நாமெனத் தனைபுத்தி சொன்னாலுங்கேட்டிலை நன்னெஞ்ச
மேனிப் படிக்கெட் டுழலுகின் றாயினி யேதுமிலா [மே
வானத்தின் மீனுக்கு வன்றூண்டி லிட்ட வகையதுபோற்
போனத்தை மீள நினைக்கின்றனையென்ன புத்தியிதே.

(பொ - ரை.) நல்லமனமே! நான் எத்தனை அறிவுகளைச்சொல்லிடினும் கேட்டுத் தெரிந்தாயில்லை, காரணமென்ன? இவ்வகையாக விதரீதப்பட்டுப் (பிரபஞ்ச) விடயங்களில் திரிகிறாய், ஆகாயத்திலுள்ள விண்மீனாகிய நட்சத்திரங்கட்கு தூண்டில் எறிந்த (அறிவில்லாத) வகையைப்போல் இனியாதொரு சம்பந்தமுமில்லாமல் நீங்கிய பொருளினை விரும்புகின்றனை இது எவ்வகையான அறிவு.

(கு-ரை.) உலகிலொருவன் சென்ற விஷயங்களைப்பற்றி மறுபடியும் எண்ணி எண்ணித் துக்கித்தல் ஆகாயத்திலுள்ள விண்மீனைப் பிடிக்கவேண்டுமெனக்கருதிப் பூமியிலிருந்தபடி தூண்டின் முள்ளைப்போலக் கருதும் அறிவீனத்தினையொக்கு மென்பதாம்.

அஞ்சக் காமெனுங் கோடாலி கொண்டிந்த வைம்புலனும்
வஞ்சப் புலக்கட்டை வேரற வெட்டி வளங்கள்செய்து
விஞ்சத் திருத்திச் சதாசிவ மென்கின்ற வித்தையிட்டுப்
புஞ்சக் களைபறித் தேன்வளர்த் தேன்சிவ போகத்தையே.

(பொ-ரை.) பஞ்சாட்சரமென்று சொல்லப்படும் கோடாலியினால் இவ்வைம்புலன்களுந் தோன்றுகிற வஞ்சகத்தையுடைய கட்டையை முதலறும்படிவெட்டி அந்நிலத்தினைக் கொழுமையாக்கி

அதிகமாகத் திருத்தஞ்செய்து சதாசிவம் என்று சொல்லப்படுகின்றவிதையை நட்டுக் கூட்டமாகிய களைகளைப்பறித்தேனாகிச் சிவபோக மென்னும் பயிரை வளர்த்தேன்.

(கு-ரை.) ஒருவனுக்குப் பஞ்சாட்சரத்தியான மந்திரம் இருந்து கொண்டிருக்குமாகில் ஐம்புல சேஷ்டைகள் ஒடுங்கிப்போகும். அவையொடுங்கவே, மனநிலையுறும், நிலையுறவே சதாசிவதியானத்திற் கேதுவாகும். எதுவாகவே சிவபோகம் விளையுமென்பதாம்.

தாயாருஞ்சுற்றமும் பெண்டிருங் கைவிட்டுத் தாழ்ந்திடுநாள்
நீயாரு நானு ரெனப்பகர் வாரந்த நேரத்திலே
நோயாரும் வந்து குடிகொள்வ ரேகொண்ட நோயுமொரு
பாயாரு நீயுமல்லாற் பின்னை யேதுநட் பாமுடலே.

(பொ-ரை.) உடம்பே! (உன்னை) வருந்திப்பெற்றெடுத்ததாயாரும் உனைச் சூழ்ந்துகொண்டிருந்த (உறவினரும்) உன்பால் நேசம் (வைத்திருந்த) மனைவியரும் (உனக்கெனவொரு) செயலில்லாமலிருக்கும் மரணகாலத்தில், நீயார் நானார் எனப்பேசுவார்கள். அக்காலத்திலே வியாதியும் வந்து தலையெடுக்கும் (கடைசியாக) நிலையுற்ற நோயும் படுத்தபாயும் நீயுமல்லாது வேறு எந்தபொருள் உன்னோடு பிரியா சிநேகமாயிருக்கும்.

(கு - ரை.) சகல சம்பத்துடன் சௌக்கியமாகச் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்ற காலத்தில் எல்லாரும் வலியவந்து உறவாகுவர் (நோயும்பாயுமாகக்கிடக்கிற) மரணகாலத்தில் ஒருவருநெருங்கார்.

ஆயும் பொழுது மயிர்க்கால்க டோறு மருங்கிருமி
தோயு மலக்குட்டை யாகிய காயத்தைச் சுட்டிவிட்டாற்



மருதப்பிரான்வாணிபஞ் செய்ய கப்பலிற் செல்லல்

பேயு நடன மிடுங்கட மாமென்று பேசுவதை
நீயு மறிந்திலை யோபொருடேட நினைந்தனையே.

(பொ-ரை.) (ஓ மனமே) ஆராயுங்காலத்தில் ஒவ்வொரு மயிர்க்கலினும் மிகச்சிறிய புழுக்கள் மடிந்துள்ள மலநிறைந்த குட்டையாகிய இத்தேகத்தைச்சுட்டால் பேய்களும் (மேலேறிக்) கூத்தாடுகின்ற (இத்தேகமானது) (குடமாகுமென) அறிவுடையோர் பேசுவதை நீயும்கேட்டு அறிந்தாயில்லையா ( இந்நிலையைக் ) கருதாது பொருளைத்தேட நினைந்தாயே இது ஆச்சரியம்.

(க-ரை.) இவ்வுடலின் நிலையாமையினைப்பற்றி அறிஞர்கள் நன்கு சொல்லியிருந்தும் அதனை சிறிதும் கவனியாது அவ்வுடலினைப் போற்றி வளர்க்கப் பொருளைத் தேடியலைதல் அறியாமையென்பதாம். (47)

பூணும் பணிக்கல்ல பொன்னுக்குத் தானல்ல பூமிதனைக்
காணும் படிக்கல்ல மங்கையர்க் கல்லநற் காட்சிக்கல்ல
சேணுங் கடந்த சிவனடிக் கல்லவென் சிந்தைகெட்டுச்
சாணும் வளர்க்க வடியேன் படுந்துயர் சற்றல்லவே.

(பொ-ரை) தரித்துக்கொள்ளும் ஆபரணங்களைக் குறித்தல்ல, பொன்னினைக் குறித்தல்ல, நிலத்தினைக் கண்டு சந்தோஷிக்கும்படியல்ல, மாதர்கள் நிமித்தமல்ல, நன்மையாகிய சிறப்பினை நினைத்தல்ல, ஆகாயத்தினையும் கடந்த சிவபெருமானுடைய திருவடிக்கல்ல, என்மனமானது தன்னிலையினின்றும் கெட்டு வயிறாகிய சாண் உறுப்பினையும் பசியாறச்செய்ய அடியேன் அனுபவிக்கும் துன்பம் சிறிதல்ல அபாரமாகும்.

(கு-ரை.) திருவெண்காட்டடிகள் கொங்குதேயத்தில் வாசஞ் செய்து கொண்டிருக்குங் காலத்தில் மவுனநிலையுற் றிருந்தாராக லின் மவுனனிலைநீங்கியபின் ஒருநாள் ஒருவீட்டின் தலைவாயினின் று கைதட்டிப் பிச்சையேற்க அவ்வீட்டுடையான் அவரைக் கள்வனென எண்ணிப் புடைக்கும் சமயத்தில் அயலாரோடிவந்து சிவயோகி யென்றுணர்ந்து வேண்டிய உபசாரம் செய்தபோது பாடியதிருச் செய்யுளிது.பசிநோய் யாவற்றினும் கொடிய தென்பார் 'படுந்துயர் சற்றல்லவே' என்றனர். ஔவையார் 'மானங்குலங்கல்வி வண்மை யறிவுடைமை, தானந் தவமுயற்சி தாளாண்மை—தேனின், கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும், பசிவந் திடப்பறந்து போம்.'

வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம் வேறொருவர்க்
கெட்டாத புட்ப மிறையாத தீர்த்த மினிமுடிந்து
கட்டாத லிங்கங் கருதாத நெஞ்சங் கருத்தினுள்ளே
முட்டாத பூசையன் றோகுரு நாதன் மொழிந்ததுவே.

(பொ-ரை.) செப்புத்தகட்டிலே செதுக்காதயந்திரமும், வாயி னாலே செபியாதமந்திரமும், எட்டியறுக்கக்கூடாதமலரும், தருப் பணம் செய்யாத தீர்த்தமும், பெட்டகத்தில் கட்டிவையாத இலிங் கமும், தற்போதமுன்னிட்டு நினையாத மனமும், உள்ளத்தில் கால வரையல்லாதபூசை அல்லவோ ஆசாரியன் உபதேசித்தது.

(கு-ரை.) புறப்பூசைகட்கு இடம்பொருளேவல் இன்றியமை யாது வேண்டியிருத்தலினாலும், ஒவ்வொருகாலத்தில் அவைகட்கு முட்டுப்பாடு வருமானபடியாலும்,அங்ஙனம் நேர்ந்தகாலத்தில் திரு வுளக்கேடு உண்டாமாகலினாலும், இத்தகையபூசை இல்லறத்தினர் கட்கே யனுகூலமாக இருக்குமானபடியாலும், துறவியாகிய தனக்கு அத்தகைய சாதனம் நீங்கி, அந்தர்முகபூசை எக்காலத்தும்

இடையூறின்றி நடத்தும்படி தனதாசிரியர் உபதேசித் தருளினா ரென்பார், 'குருநாதன் மொழிந்ததுவே' என்றனர். (49)

எருமுட்டை பிட்கி னுதிர்ந்திடுஞ் செல்லுங் கெவரழு[illegible]
கருமுட்டை புக்குக் கழலைகன் றீர்கன துக்கமதாய்ப்
பெருமுட்டுப் பட்டவர் போலெழும் பேதையிர் பேத்துகிறீ
ரொருமுட்டும் வீட்டு மரணும மென்றைக்கு மோதுமினே.

(போ-ரை.) 'ஜெகத்தீரே! தாயினுடைய கருப்பமாகிய முட்டையினுள்ளே பிரவேசித்துச் 'சிவபெருமானுடைய, திருவடிகளை நீங்கினீர், இந்நீக்கத்துக்காகத் துக்கப்படாமல் இவ்வுடல் நீங்கியதின்பொருட்டு மிகுந்ததுன்பமுடையவர்களாய்ப்பெரிய இடரையடைந்து அழுகின்ற மூடர்களே!'என் கலக்கம் கொள்ளுகிறீர்'ஒருகுறைவும் வாராதபடி செய்யும் பரமசிவன் திருநாமங்களை எக்காலமும் தோத்திரம் செய்யுங்கள். எருமுட்டையினைப் பிதிர்த்தால் அதிலிருந்து உதிர்கின்ற செல்லுக்கு எவர் அழுபவர்கள் (ஒருவரும் அழார்.)

(கு-ரை.) இறந்துபட்ட பலதேகங்கள் எருமுட்டைப் புழுக்களுக்குச் சமானமாகும், ஆகலின் சென்றபிறப்புக்களை எண்ணி எண்ணித் துன்பப்படுதலில் சிறிதும் பிரயோசனமில்லை, சிவபெருமான் திருவடியினை மறந்தோமோவென எக்கங்கொண்டிருக்கின் அதனால் பெரும் பிரயோசனம் விளையுமென்பதாம். (50)

மையாடு கண்ணியு மைந்தரும் வாழ்வு மனையுஞ்செந்தீ
ஐயாநின் மாயை யுருவெளித் தோற்ற மகிலத்துள்ளே
மெய்யா யிருந்தது நாட்செல நாட்செல வெட்டவெறும்
பொய்யாய்ப்பழங்கதையாய்க்கனவாய்மெல்லப்போனதுவே.

(போ-ரை.) சிவந்த தீயினைக் கரத்திலேந்திய ஐயனே! மையினைத்தீட்டிய கண்களைவாய்ந்த மனைவியும், புத்திரரும், பிரபஞ்ச வாழ்வும், வாழ்க்கைவீடும் தேவரீருடைய மாயாகாரியங்களாம். இவ்வுலகிலே முதலில் சத்தாகத் தோன்றியது காலங்கழியக் கழிய முழுவதும் பொய்யாகிப் பழமையான கட்டுக்கதைகளாய்க் கனவு கண்டது போலாகி மெதுவாக நீங்கியது.

(சு-ரை.) பிரபஞ்சசோதனை பண்ணாது பகிர்முக நாட்டத்துடனே வாழுகிற காலத்தில் எல்லாம் நிலையுள்ள சத்தியப்பொருளாகவே தோன்றின. நாளுக்குநாள் தத்துவசோதனைப் பண்ணிக்கொண்டுவருகிற காலத்தில் அவர்கள் கன்மத்தினுக்குத் தக்கபடி சிவபெருமான் மாயையினின்றும் காரியப்படுத்திவைத்த பதார்த்தங்களாகவே தோன்றுதலும், அவற்றினிடத்துப் பற்று நீங்கவே, அவைமறுபடியும் சத்தியமாகத் தோன்றுதலில்லையாகலின், 'மெல்லப்போனதுவே' என்றனர். (51)

ஆயாய்ப் பலகலை யாய்ந்திடுந் தூய வருந்தவர்பாற்
போயா கிலுமுண்மை யைத்தெரிந் தாயில்லை பூதலத்தில்
வேயார்ந்த தோளியர் காம விகாரத்தில் வீழ்ந்தழுந்திப்
பேயாய் விழிக்கின் றனைமனமே யென்ன பித்துனக்கே.

(போ-ரை.) மனமே! பலவாகிய சாஸ்திரங்களை விசாரியாமல்,விசாரித்தறிந்தபின் பரிசுத்தம் பொருந்திய தவத்தில் மிகுந்தவரிடத்துச் சென்றாயினும் உண்மை யின்னதெனத் தெரிந்துகொண்டாயில்லை, உலகின் கண்ணே மூங்கிலினை யொத்த தோளைவாய்ந்த மாதர்களின் காமவிகாரமாகிய சமுத்திரத்தில் விழுந்து முழுகிப் பேய்போல விழிக்கின்றனை, உனக்கென்ன பயித்தம்.

(கு-ரை.) மெய்கண்ட சாத்திரங்கள் பலவற்றைக் கற்றலும் கேட்டலுமாகிய இருஞானம் கிடைக்கப்பெறின் தெளிதலும் நிட்டை கூடுதலுமாகிய இருஞானம் இலேசாகக் கிடைக்குமாகலின், முன்னிரண்டினைமாத்திரம் குறித்தனர். மெய்கண்ட செல்வரிடம் போய் அடுத்தே கேட்க வேண்டுமென்பார், போயாகிலுமென்றனர், மாதர்மயக்கிற் பட்டார்கட்குச் சாஸ்திர ஆராய்ச்சி கிட்டாதென்பார், 'என்ன பித்துனக்கே' என்றனர். ஈண்டு உண்மையென்றது ஆன்மாவின் பெத்த நிலையாகிய பொதுவினை விசாரியாது, ஆன்ம தரிசனம் சிவதரிசனமாகவுள்ள விசேடங்களையறியாமல், பொது இலக்கணம் கூறுவது வேதம், உண்மையாகிய சிறப்பு இலக்கணங்களைக் கூறுவது ஆகமம். ஆகவே ஆகமங்களை விசாரித்தாயில்லை யென்பார். 'உண்மையைத் தெரிந்தாயில்லை' யென்றனர், சிவஞானசித்தியார். 'ஆரணநூற் பொதுச் சைவமருஞ் சிறப்பு நூலாம்' என்றதனாற் காண்க. (52)

அடியா ரூறவு மரன்பூசை நேசமு மன்புமன்றிப்
படிமீதில் வேறு பயனுளதோ பங்கயன் வகுத்த
குடியான சுற்றமுந் தாரமும் வாழ்வுங் குயக்கலங்கள்
தடியா லடியுண்ட வாறெக்கு மென்றினஞ் சார்ந்திலரே.

(பொ-ரை.) சிவனடியார்கள் சிநேகமும், சிவபூசையில் விருப்பமும், பத்தியுமில்லாமல் இவ்வுலகில் (ஒருவனுக்குப்) பயன் கொடுக்கும் செயல் வேறுண்டாமோ, பிரமன் சிருஷ்டித்த குடியிற் பிறந்த உறவினரும், மனைவியும், பிரபஞ்ச வாழ்க்கையும் குயவனாற் செய்யப்பட்ட பாண்டங்கள் தடியினாலடிப்பட்ட வகையாக ஒத்திருக்கு மெனவெண்ணி (மேற்படி) சிவனடியார்களாகிய இனத்தினைச் சேர்ந்தாரில்லையே.

(கு-ரை.) ஒருவன் இன்றியமையாது அனுபவிக்க வேண்டிய பெரும்பயன் அடியார் உறவும், அரன்பூசையும், அன்பும் ஆகிய இவற்றாலன்றி வேறுவிதத்தால் முடியாதென்பார் 'வேறு பயனுள தோ' என்றனர். சிவபெருமான் தொண்டர்களிடத்தும் சிவலிங் கத்தினிடத்தும் எழுந்தருளியிருப்பது சத்தியமாகலின் 'அடியா ருறவும் அரன் பூசையும்' வேண்டுமென்றனர். அந்நேசமும் பூசை யும் மனங்கசியச் செய்யவேண்டுமென்பார் 'அன்பும்' என்றனர். சிவப்பிரகாசம் "தொண்டர்களிடத்தும் வானோர் தொழுந் திரு மேனிதானும், மண்டருங் கண்டிலாத வண்ணலேயென வணங்கி, வெண்டாளங்கள் சிந்த வழிமொழி குழறிமெய்யே, கண்டுகொண் டிருப்பர் ஞானக் கடலமு தருந்தினோரே" என்றதனாற்காண்க.(53)

ஆங்காரப் பொக்கிஷங் கோபக்களஞ்சிய மாணவந்தான்
நீங்கா வரண்மனை பொய்வைத்த கூடம்விண் ணீடிவளர்
தேங்கார் பெருமதிற் காம விலாசமித் தேகங்கந்தல்
பாங்கா யுனைப்பணிந் தெப்படி ஞானம் பலிப்பதுவே.

(பொ-ரை.) அகங்காரத்தினுக்கு ஒரு பொக்கிஷமாயும், கோ பத்தினுக்கு ஒரு களஞ்சியமாகவும், ஆணவமானது என்றும் ஒழி யாத காவல் வீடாயும், பொய் அமைந்துள்ள கூடமாயும்,ஆகாயத் தினை யோங்கி வளர்ந்து நிறைந்துள்ள பெரியமதில் சூழ்ந்த காம சபையாயும், (உள்ள) நவத்துவாரங்களை வாய்ந்த தேகக் கந்தலே! பக்குவமாக வுன்னை உபசரித்து வந்தால் எந்தவிதமாக ஞானங் கைகூடிவரும்.

(கு-ரை.)அகங்காரம், கோபம், ஆணவம், பொய்,காமம் ஆகிய வற்றிற்கு இடமாயுள்ள தேகத்தினைப் போஷித்து வருதலிலேயே

காலத்தைக்கழித்துவரின் ஞானம் சித்தியாதென்பார் 'எப்படி ஞானம் பலிப்பதுவே' என்றனர். இதனால் அகங்காராதிகளை யொழித்துவிட்டால், ஞானமடைதற்குத் தேகம் சாதனமாக விருக்குமாகலின், அப்போது உடலைப்பேணி வருவதினால் கெடுதலில்லையென்பதாம். (54)

ஒழியாப் பிறவி யெடுத்தேங்கி யேங்கி யுழன்றநெஞ்சே
பழியாப் பதவிக் கவுடதங் கேட்டி யநாதியனை
மழுமான் கரத்தனை மால்விடை யானை மனத்திலுன்னி
விழியாற் புனல்சிந்தி விம்மி யழுநன்மை வேண்டுமென்றே.

(பொ-ரை) நீங்குதலில்லாத எண்ணில்லாத ஜென்மங்களை யெடுத்து அழுது அழுது அலைந்த மனமே! எக்காலத்திலும் அழியாத மோட்ச வீட்டிற்கு மருந்து (சொல்வேன்) கேட்பாயாக, என்று முள்ளவனை, மழுவினையும், மானினையும் ஏந்திய கரங்களையுடையானை, திருமாலாகிய இடபத்தை யுடையானை, அழியாத பதவிவேண்டுமென்று மனத்தே தியானித்து கண்களில் ஆனந்தக் கண்ணீர் சிந்தித்தேம்பியழு! இதுவேமருந்தாம்.

(கு-ரை.) அழியாத பதவிக்கு அழியாத தெய்வத்தை வணங்க வேண்டுமென்பார் 'அழியாப்பதவி, அநாதியனை' என்றனர். கண்ணீரும் கம்பலையுமாக நின்றவர்க்கே நன்மையுண்டாகு மாகலின் விம்மியழு என்றனர். திருவாசகம் "மெய்தானரும்பி விதிவிதிர்த்துன் விரையார் கழற்கென் கை தான்றலை வைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பி" எனவும், 'அழுதாலுன்னைப் பெறலாமே' எனவும் வருவனவற்றாற் காண்க. (55)

நாய்க்கொரு சூலு மதற்கோர் மருத்துவ நாட்டிலுண்டோ
பேய்க்கொரு ஞானம் பிடிபடு மோபெருங் காஞ்சிரங்கா

யாக்குவ ரார தருந்துவ ராரது போலுடம்பு
தீக்கிரை யாவதல் லாலேதுக் காமிதைச் செப்புமினே.

(பொ-ரை.) நாயினுக்கு ஒரு கர்ப்பமும் அக்கருப்பத்தினுக்கு ஒரு வைத்தியமும் இவ்வுலகிலுளதோ, பேயினுக்கு ஒரு ஞானம் பற்றுமோ, பெரிய எட்டிக்காயை வளர்ப்பவர் யாவர், அக்காயினை யுண்பவர்யாவர், அதுபோல இத்தேகம் நெருப்பினுக்கு இரையாய் விடுவதல்லாமல் எதற்குப் பிரயோசனம் சொல்லுங்கள்.

(கு-ரை.) பத்திரகிரியார் தன்னை வணங்கி நின்றபோது அவர்க்கோருறுதியுண்டாகும்படி அருளிச்செய்த திருச்செய்யுளிது. நாயினுக்கு மருத்துவம் செய்ய யாரும் ஏற்படார் போலப் பேய்போல அலைபவனுக்கு ஞானம்போதியாரெனவும், காஞ்சிரங்காயா ருக்கும் உபயோகப்படாததுபோலத் தேகமும் பிரயோசனமில்லை யென்றனர். இதனால் கசப்பினைத்தரும் எட்டிமரத்தினை நீக்கி உருசியைத்தரும் மாமரத்தினை வளர்த்து வருதல் வழக்கத்திலிருத்தல் போல பாவத்தினுக்கேதுவாகிய உடலினைப் போஷித்தல் நலமில்லையென வேற்பட்டது. (56)

கச்சிற் கிடக்குங் கனதனத் திற்கடைக் கண்கள்பட்டே
யிச்சித் திருக்கின்ற வேழைநெஞ் சேயிம வான்பயந்த
பச்சைப் பசுங்கொடி யுண்ணா மலைபங்கர் பாதத்திலே
தைச்சுக் கிடமன மேயொரு காலுந் தவறில்லையே.

(பொ-ரை) இறுக்கிக்கட்டிய கச்சியினுக்குள் தங்கியிருக்கும் பெருத்த தனங்களிலே உன்னுடைய கடைக்கண் பார்வைபட்டதினாலே, அத்தனத்தினை வாய்ந்த மாதர்களிடத்து ஆசை வைத்துக் கிடக்கின்ற அறியாமையுடைய மனமே! மலையரசன் பெற்றெடுத்த மிகவும் பசுமையாகிய பூங்கொடியை ஒத்தவளாகிய உண்ணாமுலைத்

தேவியினை வாமபாகத்தில் உடையாரது திருவடிகளிலே ஊன்றி யிருமனமே ஒரு காலத்திலும் உனக்குத் தவறுதல் உண்டாகாது. (சிவகதி கிடைக்கும்.)

(கு-ரை.) மாதர்களின் மயலில் மாந்தர்கள் சிக்குண்டு கிடப்பது சகசமாகலின் 'தனத்தில்—இச்சித்திருக்கின்ற வேழை நெஞ்சே' என்றனர். 'பயோதரமாகிய ஸ்தனமானது "மைந்தர்கள் மனஞ்சூறையிட்டு" என்றதனாற் காண்க. திருவடிஞானமே சிவகதிக்கு எதுவாகலின் 'பாதத்திலே தைச்சுக்கிட' என்றனர். திருமந்திரம் "திருவடி யேசிவ மாவது தேரிற், றிருவடி யேசிவ லோகஞ் சிந்திக்கிற், றிருவடியேசெல் கதியது செப்பிற், றிருவடி யேதஞ்ச முட்டெளி வார்க்கே" என்றதனாற் காண்க. (57

மானார் விழியைக் கடந்தேறி வந்தனன் வாழ்குருவுங்
கோனாகி யென்னைக் குடியேறிக் கொண்டனன் குற்றமில்லை
போனாலும் பேறிநந் தாலுநற் பேறிது பொய்யன்றுகா
ணானா லிந்த வுடம்போ டிருப்ப தருவருப்பே.

(பொ - ரை.) மாதர்களுடைய கண்ணாகிய வலையினைக்கடந்து வந்தனன், சிவானந்தத்தில் வாழ்கின்ற ஆசாரியனும் நாயகனாகி, அடியேனைத் தனது திருவருட் பூமியில் குடியாக ஏற்றுக்கொண்டனன், இனியெனக்கு யாதொரு குறைவுமில்லை (இனி) இவ்வுடல் நீங்கினாலும் இலாபமுண்டு, இவ்வுலகிலேயே வாழ்ந்தாலும் நல்ல இலாபமுளது இதுசத்தியம். ஆனாலும், இந்த உடலினுடனிருப்பது மாத்திரம் அருவருக்கத் தக்கதாகும்.

(கு-ரை.) அதிகத் துன்பத்திற்கேதுவாகிய மாதர்கள் மோகத்தினின்று நீங்கி அடையவேண்டிய குருகடாட்சமடைந்து விட்ட

படியால் இனி உடல் இறக்கினும் நன்மையேயாம், ஆயினும் திருவருட்பெருந்தகைமையில் உடற்பற்றால் யாதொரு பிரயோசனமுமில்லையென்பர் 'உடம்போடிருப்ப தருவருப்பே' என்றனர். (58)

சற்றாகி னுந்தன்னைத் தானறி யாய்தன்னை யாய்ந்தவரை
யுற்றா கிலுமு ரைக் கப்பொருந் தாயுனக் கானநிலை
பற்றாய் குருவைப் பணியாய் பரத்தையர் பாலிற்சென்றென்
பெற்றாய் மடநெஞ்ச பேயுனைப் போலில்லை பித்தனுமே.

(பொ-ள்.) சிறிதேனும் உன்னிலைமையினை நீயறியமாட்டாய், தன்னை விசாரித்துத் தேர்ந்தவரை அடைந்தாயினும் அவர்கள் (நல்ல விஷயங்களை யெடுத்துச்) சொல்ல (அவற்றைக்கேட்கப்) பொருந்தமாட்டாய், உனக்குத் தகுந்தநிலையானது இன்னதெனக் கைக்கொள்ளாய், ஆசாரியனை வணங்காய், வேசிகளிடத்தில்போய் என்ன இலாபமடைந்தாய், அறியாமையினை வாய்ந்தமனமே! உன்னைப்போல வொருபித்தன் (இவ்வுலகில்) இல்லை.

(கு - ரை.) தன்னைத்தானறிதலாவது ஆன்மா சுதந்தரனல்லனென்றும், எந்நாளும் ஆண்டவனுக்கு அடிமையென்றும், கன்மத்திற்குத் தக்கபடி முதல்வனறிவித்தாலன்றி யொன்றையு மறியாதென்றும் தெரிந்து கொள்ளுதல். தனையாய்ந்தவர் என்பது ஆன்மவிசாரம் செய்தவர். உனக்கான நிலையென்பது திருவருளைப்பற்றிக்கிடத்தல். குருவைப்பணியாய் என்றது இவையனைத்தும் தேர்தற்குக் காரணமாயிருப்பது ஆசாரியவழிபாடு என்பதாம். (59)

உளியிட்ட கல்லையு மொப்பிட்ட சாந்தையு மூத்தையறப்
புளியிட்ட செம்பையும்போற்றுகி லேனுயர்பொன்னெனவே

யொளியிட்டதாளிரண் டுள்ளேயிருத்துவ துண்மையென்று
வெளியிட் டடைத்துவைத் தேனினிமேலொன் றும்வேண்டி
[லனே.

(பொ-ரை.) இரும்பு உளியினால் செதுக்கப்பட்ட கற்சிலையி னையும், அங்கங்கள் ஒழுங்குறவமைந்த சுன்னச் சாந்தினாற் செய்யப் பட்ட உருவத்தையும், புளியிட்டுத்துலக்கிய செம்புவிக்கிரகத்தை யும் துதித்து வணங்கேன், உயர்ந்த பொன்னுக்குச் சமானமென வேபிரகாசியானின்ற (சிவபெருமானுடைய) இரண்டு திருவடிகளை மனத்தினுள்ளே வைப்பது (கூடுமான) நன்னிலையென்று சொல் லித் தியானத்தில் வைத்துக்கொண்டேன். இனிமேலென்றைக்கும் ஒருபொருளும் வேண்டியதில்லை.

(கு-ரை.) பகிர்முகத்தில் கற்சிலையினையும், சாந்துருவத்தினை யும், பொற்சிலையினையும் தரிசிக்கிறகாலத்தில் அவ்வவ்வுருவங்க ளாகத் தோன்றுவதேயன்றித் தெய்வவடிவாகக் கிரகிப்பதற்குப் பக்குவமில்லேனாகலின், அப்பாவனையால் அபசாரப்படாது, அந்தர் முகத்தில் சிவபெருமான் திருவடிகளைத் தியானித்துய்வேனென்ற னர். விக்கிரகங்களைத் தெய்வமாகப்பாவியாது தெய்வத்தை விக்கிர மாகப் பார்க்கவேண்டு மாகலினாலும், அது அதிதீவிரப் பக்குவமு டையார்க்கே விளங்குமாகலினாலும், அங்ஙனம் பக்குவம் விளையாத வழி மனத்தியானத்திலேயே திருப்தியடையவேண்டிய தாகலினா லும், 'இனிமேலொன்றும் வேண்டிலேன்' என்றனர். இங்ஙனம் பொருள்கொள்ளாது சிலவாசிரியர் விக்கிரகாராதனையை மறுத் துக் கூறினரென்பர். அந்தோ அவர்கள் 'தாளிரண்டு' எனத்திருவ டியைக்குறித்த உண்மையைத் தேராதவராவர். 'தாள்' உருவத்திற் கன்றி அருவத்திற்கின் றென்பது யாருமறிந்ததே, 'தாள்' என்ப தற்கு வேறு பொருள்கூறி இடர்ப்படுவோருமுளர். அவர்கள் லீலா லீட நியாயமாக உரை கொள்பவரேயாம். (60)

கல்லா லெறியுண்டுங் காலா லுதையுண்டுங் காளைகையில்
வில்லா லடியுண்டு முன்னாள் விடமுண்டு மேலிளித்துப்
பல்லாற் புரமெரி யேகம்ப வாணர் பதாம்புயத்தின்
சொல்லார் செவியினிற் கேளா திருந்ததென் றொல்வினையே.

(பொ-ரை.) கல்லினாலேயெறிபட்டும், காலினால் உதைபட்டும், (ஒரு) ஆண்மகன்கை வில்லாலடியுண்டும், பூர்வத்தில் விஷத்தினை யுட்கொண்டும் அதற்குமேல் புன்சிரிப்புப் பல்லினால் திரிபுரத்தினையெரித்த ஏகாம்பரநாதர், திருவடித்தாமரையின் தோத்திரத்தினை (என்) காதாரக் கேளாதிருந்ததற்குக் காரணம் என்னுடைய பழமையான வினையேயாம்.

(கு-ரை.) கல்லாலெறிந்தவர் சாக்கியநாயனார், காலினாலுதைத்தவர் கண்ணப்பநாயனார், வில்லாலடித்தவர் அருச்சுனன், விஷம் சாப்பிட்டது தேவர்கள் க்ஷேமார்த்தம், திரிபுரமெரித்தது சிவபூசையினின்றும் வழுவியநிமித்தம், காஞ்சி ஏகாம்பரநாதன் பெரும்புகழ் தனது காதினுக் கெட்டாதிருந்தது தொல்வினையே காரணமென்றனர். (61)

ஒருநான்கு சாதிக்கு மூவகைத் தேவர்க்கு மும்பருக்குந்
திருநாளுந் தீர்த்தமும் வேறுள தோவத் திசைமுகனால்
வருநாளில் வந்திடு மந்தக் கண்ணாளன் வகுப்பொழிபக்
குருநாத னாணைகண் டீர்பின்னை யேதிக் குவலயத்தே.

(பொ-ரை.) (உலகில் நிகழும்) நால்வகை வருணத்தார்களாகப் பிரிந்துள்ள சாதிகளில் (வந்த பெரியோர்கட்கும்) மூன்று வகைப்பட்ட பிரமா விஷ்ணு உருத்திரர் என்னும் தேவர்கட்கும் தேவர்களுக்கும் உண்டாயிருக்கின்ற திருவிழாக்களும், தீர்த்தங்களும் (சிவபெருமானுக்கு அன்னியமாக) வேறாகவுண்டோ இல்லை.

நான்முகனால் வகுக்கப்பட்ட நாள்களில் வருவன வந்து விளையும், அந்தத்தலைவனாகிய பிரமன் வகுத்த கிரமங்களை யனுபவித்தொழிந்தால் ஆசாரியன் கட்டளையுண்டாம், இவ்விரண்டினுக்கும் வேறு ஏதுண்டு, இவ்வுலகின் கண்ணே.

(த-ரை.) சிவானுக்கிரகம்பெற்ற வரையே உலகம் கொண்டாடிமகிழுமாகலின் அப்பெருமானுக் கன்னியமாக வேறொன்றுமில்லையென்பார், 'வேறுளதோ' என்றனர். அவரவர்கள் கன்மத்திற்குத் தகுந்தபடி பிரமன் விதித்துள்ள போகங்களை அனுபவித்தொழிந்த பின்னரே திருவருள்பதியக் குருகடாட்ச முண்டாகலின் பிரபஞ்சானுபவத்தில் திருவருளனுபவமும் திருவருளனுபவத்தில் பிரபஞ்சானுபவமும் விளையா தென்பதாம். (62)

## எண்சீர் விருத்தம்.

நாப்பிளக்கப் பொய்புரைத்து நவநிதியந் தேடி
நலமொன்று மறியாத நாரியரைக் கூடிப்
பூப்பிளக்க வருகின்ற புற்றீசல் போலப்
புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர்
காப்பதற்கும் வகையறியீர் கைவிடவு மாட்டீர்
கவட்டுத்தொல்மரத்துளையிற்கா னுழைத்துக்கொண்டே
ஆப்பதனை யசைத்துவிட்ட குரங்கதனைப் போல
வகப்பட்டீர் கிடந்துழல வகப்பட்டீரே.

(பொ-ரை) நாவானது பிளந்து போகும்படிப் பொய்வார்த்தைகளைப் பேசி நல்ல திரவியத்தைச் சம்பாதனைசெய்து நன்மை

யென்பது சிறிதுமில்லாத பெண்களைப்புணர்ந்து, பூமியானது பிளந்துபோகும்படி எழுகின்ற புற்றிலிருந்துவரும் ஈசலினைப்போலப் புலபுலவெனவும் கலகலவெனவும் பிள்ளைகளைப்பெற்றிடுவீர், அப்பிள்ளைகளை காப்பாற்றுதற்கும் வகையேதுமறியீர் அவர்களைக் கைவிடவுமாட்டீர்கள் கிளையுடன்கூடிய பழைய வொரு மரத்தின் பிளவில் காலை துருத்துக்கொண்டு (அப்பிளவினுக்குத் தச்சன் வைத்துப்போன) ஆப்பினையசைத்து பிடிங்கிவிட்டபின் (தனது காலை மாட்டிககொண்டு துன்பப்படும்) குரங்கினைப்போல இப்பிரபஞ்சத்தில் அகப்பட்டுக் கொண்டீரே.

(கு-ரை.) திருவாரூரில்: தன்னையடுத்து மிகுந்த விசுவாசத்துடனிருந்த ஒருவனுக்கு விவாகம் நடந்தகாலத்தில் அவன் வேண்டுகோளுக்கியைந்து அவன் மணப்பந்தலுக்குச் சென்று அவனுக்கு இனி நேரிடுங் காரியத்தைக் கூறவேண்டி இச்செய்யுளைப் பாடிச் சேஷையிட்டு ஆசீர்வதித்துச்சென்றனர். தச்சனொருவன் ஒருநெடு மரத்தினைவாளால் சிறிதுதூரமறுத்து அப்பிளவிற்கு ஆப்புவைத்து விட்டுப்போன சமயத்தில் ஒருகுரங்கு ஓடிவந்து அப்பிளவில் காலையிட்டு ஆப்பினைப்பிடுங்கியபின் கால்மாட்டிக்கொண்டு துன்பமுற்றதுபோல உலகமின்னதெனச் சிறிதுமாராயாது அப்பிரபஞ்ச மயமாய் விவாகம் முடித்துக்கொண்டு பின் திண்டாட்டம் பெறுவரென்பதாம்.

அறுசீர் விருத்தம்.

மத்தளை தயிருண் டானு மலர்மிசை மன்னி னானும்
நித்தமுந் தேடிக் காணா நிமலனை நீயின் றேகிச்
செய்த்தலை கயல்பாய் நாங்கூர் சேந்தனை வேந்த னிட்ட
கைத்தளை நீக்கி யென்முன் காட்டுவெண் காட்டு ளானே.

(பொ-ரை.) மத்தினாலே கடையப்பட்ட தயிரினைத் திருடி யுண்டவனாகிய கிருஷ்ணனான நாராயணனும், தாமரைமலரின் மேல் நிலைபெற்றவனாகிய பிரமனும் பிரதிதினமும் தேடிய அவர் கட்குக் காணப்படாதுநின்ற மலராகிதனே தேவரீர் இன்றையதினம் சென்று கழனிகளிடத்தில் கயற்கண்டைகளோடியுலாவும் நாங்கூர்சேந்தன் என்பவனை அரசன்போட்டுவித்த கைவிலங்கினைத் தறித்து எனக்கு முன்னே அவனைக்காட்டவேண்டும் திருவெண் காட்டி லிருப்பவனே.

(கு-ரை.) திருவெண்காடர் துறவடைந்தபின் தனது காரியஸ்தரை அரசன் சிறையிட்டிருப்பதனைக் கேள்வியுற்று அவனை விலங்கினின்றும் நீக்கித் தன்முன்னே கொண்டுவரும்படி பாடிய திருச்செய்யுளிது. (65)

---

## தாயாருக்குத்
## தகனகிரியைசெய்கையிற் பாடிய
### நேரிசை வெண்பா.

ஐயிரண்டு திங்களா வங்கமெலா நொந்துபெற்றுப்
பையலென்ற போதே பரிந்தெடுத்துச்—செய்யவிரு
கைப்புறத்தி லேந்திக் கனகமுலை தந்தாளை
யெப்பிறப்பிற் காண்பே னினி.

(பொ-ரை.) பத்துமாதங்களாக (வயிற்றிற்) சுமந்து உடம்பு முழுவதும் நொந்து பெற்றெடுத்து (அயலிலுள்ளவர்கள்) ஆண்குழந்தையென்றவுடனே, ஆசையுடனெடுத்துச் செவ்விய இரண்டுகைகளினு மேந்திக்கொண்டு பொன்மலைபோன்ற முலையினின்றும் பாலினை யுண்பித்தவளை இனியெந்தச் சென்மத்தில் காணப்போகிறேன்.

(கு-ரை.) ஒருத்தி தனது பிரசவகாலத்தில் எவ்வளவு துன்ப மடைந்து மூர்ச்சித்திருக்கினும் பிறர்வந்து ஆண்குழந்தை யென்ற மாத்திரத்து அத்துன்பமனைத்தையும் ஒருபொருட்டாக மதியாது அப்பிள்ளையினிடத்து மிக அன்பு பாராட்டுவாளென்பதாம். பெண் குழந்தையினிடத்து அவ்வளவு அன்பு நிகழாது என்பது குறிப்பால் விளங்குகிறது. (1)

முந்தித் தவங்கிடந்து முந்நூறு நாட்சுமந்தே
யந்திபக லாச்சிவனை யாதரித்துத்—தொந்தி
சரியச் சுமந்துபெற்ற தாயார் தமக்கோ
வெரியத் தழன்மூட்டு வேன்.

(பொ-ரை.) (கருப்பம் வாய்ப்பதற்கு) முன்னே அநேகமான விரதங்களை யெல்லாம் அனுஷ்டித்து, (கருப்பம் வாய்ந்த பிறகு) முந்நூறுநாட்கள் வரையில் இரவும் பகலும் (தனது கருப்பத்தி னுக்கு) யாதொரு பங்கமும் (வராதபடி) சிவபெருமானை வழிபட்டு வயிறுசரியச் சுமந்தீன்ற (என்னுடைய) தாயினுக்கோ நெருப்பெ ரிய மூட்டுவிப்பேன்.

(கு-ரை.) தனது அன்னை இறந்தவுடன் தனது சுற்றத்தினர் சுடுகாட்டிற்குத் தூக்கிக்கொண்டுவர அவர்களைக் கல்லாலெறிந்து துரத்திவிட்டுத் தானே தன்தாயினை யெடுத்துக் கொண்டுபோய்ப் பச்சைவாழை மரங்களின்மீது வளர்த்தித் துன்பமுற்றுப் பாடிய திருச்செய்யுள்கள் மூந்தியது முதல்பின்னேழும். (2

வட்டிலிலுந் தொட்டிலிலு மார்மேலுந் தோண்மேலும்
கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து—முட்டச்

றகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டுந் தாய்க்கோ
றகிலிட்டுத் தீமூட்டு வேன்.

(கு - ரை.) வஸ்திரத்தினுற் செய்யப்பட்ட ஏணையிலும், மரத் தொட்டிலிலும், தனது மாரின்மீதும், தோளின்மீதும், மஞ்சத்தி லும், என்னைவளர்த்தி விரும்பி விழித்தநேரம் முழுவதும் இடுப்பில் வைத்துக் காப்பாற்றிச் சிறப்புசெய்யும் தாயாரையோ விறகின் திட்டு நெருப்பை மூள்விப்பேன்.

(கு - ரை.) குழந்தைகள் அழுகிற காலத்தில் அக்குழந்தைக ளின் நோக்கத்தினைத் தெரிந்துகொள்வதற்குக் கூடாமல் அவ்வழு கையினைமாற்றவும், சுகமாக நித்திரை செய்விக்கவும், பலவிடங்க ளில் வைத்துவைத்துச் சுகப்படுத்துவதும் தாய்மார் வழக்கமென்ப ராம்.

நொந்து சுமந்துபெற்று நோவாமலேந்திமுலை
ந்துவளர்த் தெடுத்துத் தாழாமே—பந்திபசல்
கையிலே கொண்டென்னைக் காப்பாற்றுந் தாய்தனக்கோ
மெய்யிலே தீமூட்டு வேன்.

(பொ - ரை.) (அதிகப்) பிரயாசையுடன் வயிற்றில் (பத்துமா ம் வரையில்) தாங்கிப் பின்பெற்றெடுத்து வளர்த்து விருத்திய டைவித்து (எனைத்தனியே) விட்டுத் தங்கியிராமல் இரவும் பக லும் தனது கையினிடத்தே ஏந்திக்கொண்டு என்னைக் காப்பாற் ன தாயினுக்கோ உடம்பின்கண்ணே நெருப்பை மூட்டுவிப்பேன்.

(கு-ரை.) தாயார் எனது நிமித்தம் எவ்வளவு துன்பமுண்டாயி னும் அதனைப்பாராட்டாது எனக்கொருசிறிது துன்பமும் வாராத டி பாதுகாத்துவந்த அருமைத்தாயின் உடலில் அக்கினிபடும்படி ங்ஙனம் மனந்துணிவேனென்றனர். (4)

அரிசியோ நானிடுவே னாத்தா டனக்கு
வரிசையிட்டுப் பார்த்து மகிழாமலு — னுருசியுள்ள
தேனே யமிர்தமே செல்வத்திரவியபூ
மானே யெனவழைத்த வாய்க்கு.

(பொ-ரை) அன்னையினுக்கு வரிசை வைத்துப் பார்த்துச் சந்தோஷிக்காமல் சுவைவாய்ந்ததேனே, தேவாமிர்தமே, செல்வச் சம்பத்தினைவாய்ந்த மகனே, என (அன்புடனேஅழைத்து) வந்த வாயினுக்கு நான் அரிசியினையோ இடுவேன்.

(கு-ரை.) பற்பல இனிய சொற்களினால் அன்புடனே என்னை யழைத்துவந்த எனது அன்னையின் வாயினுக்கு அத்தகைய இனிமையான பதார்த்தங்களைக் கொடுத்து சன்மானிக்காமல் அவ்வாயில் வாய்க்கரிசி இடும்படி நேரிட்டது என்தலைவிதியோ வென்றனர். (5)

அள்ளி யிடுவ தரிசியோ தாய்தலைமேற்
கொள்ளிதனை வைப்பேனோ கூசாமல் — மெள்ள
முகமேன் முகம்வைத்து முத்தாடி யென்றன்
மகனே யெனவழைத்த வாய்க்கு.

(பொ-ரை.) (ஆசைமிகுதியால்) மிருதுவாக என்முகத்தின் மீது தன்முகத்தினைவைத்து முத்தமிட்டு எனதுமகனே யென்றழைத்த வாயினுக்கு வாய்க்கரிசையையோ அள்ளியிடுவது தாயினுடைய சிரசின்மேலே கைகூசாமல் கொள்ளியினையிடநேர்ந்ததே.

(கு-ரை) பேரானந்தத்துடனணைத்து முத்தமிட்ட எனது அன்னையின் சிரசில் அக்கினியையும், மிகுந்த உருக்கமுடன் என் மகனே என்றழைத்த வாயினுக்கு வாய்க்கரிசியும் இடும்படி நேரிட்டுவிட்டதும் சன்மமேயெனத் துக்கித்தபடியாம். (6)

கலி விருத்தம்.

முன்னை யிட்டதீ முப்பு ரத்திலே
பின்னை யிட்டதீ தென்னி லங்கையி
லன்னை யிட்டதீ யடிவ யிற்றிலே
யானு மிட்டதீ மூள்க மூள்கவே.

(பொ-ரை.) முதலில் (சிவபெருமானால்) இடப்பட்ட நெருப்பு முப்புரத்தின்கண்ணே (மூண்டெரிந்தது) பிற்பாடு (அனுமானால் இடப்பட்ட நெருப்பு தென்னிலங்கைநகரில் (மூண்டெரிந்தது) (இப்போது) என்தாயாரால் இடப்பட்ட நெருப்பு என்னுடைய அடிவயிற்றில் (மூண்டெரிகின்றது) (அங்ஙனமாக) யானும் தாயாருடம்பில் இட்டநெருப்பு மூண்டெரிக மூண்டெரிக.

(கு-ரை.) பெருநெருப்பு விஷயமாகப் பிரஸ்தாபிப்பது முப்புரத்திலேயும் இலங்கையிலேயுமாகலின், அவ்விரண்டினையுங்கூறினர். முப்புரத்திலே யுண்டானதுபோல என்வயிற்றி லுண்டாயதென்றும், அனுமார் மூட்டியதுபோல நான்மூட்டினேனென்றும் குறிப்பித்தனர். அதாவது தனக்குண்டாயதுக்கம் இவ்வளவிற்றெனக் கூறமுடியாதெனவும் தானிட வேண்டியது இன்றியமையாத செயலெனவும் தெரிவித்தனர். (7)

நேரிசை வெண்பா.

வேகுதே தீபதனில் வெந்துபொடி சாம்ப
லாகுதே பாவியே னையகோ—மாகக்
குருவி பறவாமற் கோதாட்டி யென்னைக்
கருதி வளர்த்தெடுத்த கை.

(பொ - ரை.) ஆகாயத்தில் பறக்கின்ற பறவைகள் (எனக்கு நேராக) மேலே பறவாதபடி என்னைப்பாராட்டி (மனத்திலே அன்

புடனே) எண்ணிவளர்த்தெடுத்த கையானது நெருப்பில் வேகா நிற்கின்றதே, வெந்து துண்ணியசாம்பலாகிறதே ஐயகோ தீவினையேன் எங்ஙனம் பார்த்துக்கொண்டிருப்பேன்.

(கு - ரை) ஆகாயத்தில் சஞ்சரிக்கும் பட்சிக்குநேரே காலைமாலைகளில் சிறுகுழந்தைகள் நேர்படில் பட்சிதோடமுண்டாமெ ன்பது சாஸ்திர வழக்காகலின் 'குருவிபறவாமல்' என்றனர். இம்மைக்கு வேண்டியவற்றையெல்லாம் உதவி, மறுமையில் புத்தெ ன்னும் நரகத்திற்கும் போகாதபடி தடுத்து மோட்சத்தையடைத ற்கு வேண்டிய வைதீக சாதனங்களையும் நடத்திவருவானென்று தாய் எண்ணியிருந்தாளாதலால் 'கருதி' என்றனர். 8

வெந்தாளோ சோணகிரி வித்தகா நின்பதத்தில்
வந்தாளோ வென்னை மறந்தாளோ—சந்ததமு
முன்னையே நோக்கி யுகந்து வரங் கிடந்தென்
றன்னையே யீன்றெடுத்த தாய்.

(பொ-ரை.) திருவண்ணாமலையி லெழுந்தருளி யிருக்கின்ற ஞானவடிவானவனே! எப்போது தேவரீரையே நாடி மகிழ்ச்சியுடன் வரம்பெறவேண்டித் தங்கி என்னைப்பெற்றெடுத்த தாயானவள் வெந்துபோயினளோ, உன்திருவடியில் வந்துசேர்ந்தனளோ என்னை மறந்துவிட்டனளோ.

(கு-ரை.) திருவெண்காடரைப்போன்ற சற்புத்திரனைப் பெறுதற்குச் சிவபெருமானை நோக்கி அரியதவங் கிடந்திருந்தாலன்றிப் பலியாதாகலின், 'வரங்கிடந்து' என்றனர். சர்வசங்கப்பரித்தியாகமடையத்தக்க ஒரு புத்திரனைப்பெற்றவள் உடனே மோட்சமடைவள் என்பது சாஸ்திர நிச்சயமாகலின் 'நின்பதத்தில், வந்தாளோ' என்றனர். (9)

வீற்றிருந் தாளன்னை வீதிதனி லிருந்தாள்
நேற்றிருந்தா ளின்றுவெந்து நீறானாள்—பாற்றெளிக்க
வெல்லீரும் வாருங்க ளேதென் றிரங்காமல்
எல்லாஞ் சிவமயமே யாம்.

(பொ-ரை.) (எனது) தாயானவள் (சுகமாக) விருந்துகொண்டிருந்தாள், வீதியிலு (முலாவிக்) கொண்டிருந்தாள், நேற்று (சீவதிசையுட) னிருந்தாள், இன்றையதினம் (நெருப்பில்) வெந்து சாம்பலாயினாள், இதென்ன ஆச்சரியமென்று (மனம்) இரங்காமல் பால் தெளிக்கும் பொருட்டு நீவிரெல்லோரும் வாருங்கள் எல்லாம் சிவமயமேயாகும்.

(கு-ரை.) தனதுதாயார் தசனக்கிரியையின் முன்னிலையாக உலகநிலையாமையினைக்குறிப்பித்தர். இத்தகையசெயல் பிரபஞ்சத்தில் நிகழ்வது சகசமாம் என்பர் 'ஏதென்றிரங்காமல்' என்றனர். தோன்றுதலும் வாழ்தலும் இறத்தலும் நமதுவிருப்பத்தின்படி சிறிதும் நடவாது பூர்வகன்மத்திற்குத் தக்கபடி சிவன்கூட்டிவைப்பானென்பார். எல்லாம் சிவமயமே, என்றனர். (10)

---

## திருவிடைமருதூர்.

மென்று விழுங்கி விடாய்கழிக்க நீர்தேட
லென்று விடியுமெனக் கென்கோவே—நன்றி
கருதார் புரமூன்றுங் கட்டழலாற் செற்ற
மருதாவுன் சந்நிதிக்கே வந்து.

(பொ-ரை.) என் தலைவனே! தருமநெறியினைநினையாதவர்களுடைய முப்புரங்களையும் பெருநெருப்பினால் சாம்பலாக்கின திருவிடைமருதூர்ப்பிரானே! தேவரீருடைய சந்நிதியிலேவந்தும் ஆகாரத்

திணையென்று உட்கொண்டு நாகவிடாய் தணிந்து கொள்ளும்பொருட்டு நீரினைத்தேடுந் தொழிலானது எக்காலத்தில் எனக்குமுடிவு பெறும்.

(கு - ரை.) திருவருண்மயமாக விளங்குஞ் சிவாலயத்திலேயேயிருந்துகொண்டு, பசியின்பொருட்டுப் பிறரைநாடி ஆகாரத்திற்கு வேண்டியவற்றைக் கொள்ளாதிருக்குநாள் எக்காலம் சித்திக்குமென்பார் 'என்றுவிடியும்' என்றனர். (1)

## திருவொற்றியூர்.

கண்டங் கரியதாங் கண்மூன் றுடையதா
மண்டத்தைப் போல வழகியதாந்—தொண்ட
ருடலுருகத் தித்திக்கு மோங்குபுக ழொற்றிக்
கடலருகே நிற்குங் கரும்பு.

(பொ - ரை.) புகழானது ஓங்கிய திருவொற்றியூரின் சமுத்திரத் தீரத்திலேயிருக்கும் கரும்பானது கண்டம் கருமையானதாம், மூன்று நேத்திரங்களையுடையதாம், ஆகாயத்தினைப்போல அழகினையுடையதாம், சிவனடியார்கள் திருமேனி ஆனந்திக்கத் தித்தித்துக்கொண்டிருக்கும்.

(கு - ரை.) சிவனடியார்கள் திருவொற்றியூர்ப் படம்பக்கநாதரைத் தியானிக்குந்தோறும் அவர்கள்மனதில் பேரானந்த சுவை விளைந்துகொண்டிருக்குமாகலின் அந்நாதரைக் கரும்பு என்றனர்.

ஒடுவிழுந்து சீப்பாயு மொன்பதுவாய்ப் புண்ணுக்
கிடுமருந்தை யானறிந்து கொண்டேன்—கடுவருந்துந்

தேவாதி தேவன் றிருவொற்றி யூர்த்தெருவிற்
போவா ரடியிற் பொடி.

(பொ-ரை.) கட்டிகள் உண்டாகிச் சப்பாயாநின்ற ஒன்பது துவாரங்களுள்ள உடலினுக்கு, இட்டு அதனைப் பரிகரிக்கத்த தந்த அவுடதத்தினை நான் தெரிந்துகொண்டேன் அதென்னெனின் நஞ்சினையுண்ட தேவாதிதேவனுடைய திருவொற்றியூர்த் தெருவின்கண்ணே நடப்பவர்களுடைய திருவடியின் துகளையாம்.

(கு - ரை.) சிவனடியார்கள் நெருங்கி எக்காலத்துமுலவும் திருவொற்றியூர் மாடவீதியிலுள்ள மண்ணிற் சிறிதினையொருவன் சிரசிற்றரித்துக் கொள்ளுவானேல் அவன்பிறப்பு எடுத்தற்கேற்ற வினையானது நீங்கிவிடுமென்பதாம். இது முத்திக்ஷேத்திரமாகலின் இவ்வுண்மை நமது திருவெண்காடர் தெரிந்தன்றே, பற்றற்ற மூர்த்தியாகிய அவர் உலகத்தின் கண்ணே பற்பலக்ஷேத்திரங்களையும் விரும்பாது இத்தலத்தினையடைந்து ஞானசமாதியிலே வீற்றிருந்தருளினர். (3)

வாவியெல்லாந் தீர்த்த மணலெல்லாம் வெண்ணீறு
காவணங்க ளெல்லாங் கணநாதர்—பூவுலகி
லீது சிவலோக மென்றென்றே மெய்த்தவத்தோ
ரோதுந் திருவொற்றி யூர்.

(பொ - ரை.) இது இவ்வுலகிலுள்ள சிவலோகமாதும் என்று பலதரம் தோத்தரித்து மெய்கண்ட தவத்தினையுடையவர்கள் புகழ்ந்துகொண்டிருக்கும் திருவொற்றியூரிலுள்ள தடாகங்களியாவும் புண்ணியதீர்த்தங்களாம், மணல்முழுவதும்திருவெண்ணீறும், சோலைகளெல்லாம், சிவகணங்களாம்.

(கு - ரை.) திருவொற்றியூர் பூலோக கைலாசமென்னச் சிவஞானிகள் சொல்லுவதால் உண்மைச் சிவனடியார்கட்கு அத்தலத்துத் தடாகங்கள் புண்ணியதீர்த்தமாகவும், மணல் விபூதியாகவும், விருட்சங்கள் சிவகணங்களாகவும் தோன்றுமென்பதாம். ஆகவே திருவெண்காடர் தாம்கண்ட அனுபவ உண்மையை யிங்ஙனம் கூறினார். (4)

## திருவாரூர்.

ஆரூர ரிங்கிருக்க வவ்வூர்த் திருநாளென்
றூரூர்க டோறு முழலுவீர்—நேரே
யுளக்குறிப்பை நாடாத வூடர்கா ணீவீர்
விளக்கிருக்கத் தீத்தேடு வீர்.

(பொ - ரை.) திருவாரூருடையார் இவ்விடத்திலிருக்க (இத்தலத்தினைக்கடந்து, அந்த ஊரில் திருநாளென்றும் எல்லாவூர்களிினின்றும் சென்று அலைபவர்களே நேராக மனக்கருத்தையறியாத மூர்க்கர்களே! நீங்கள் தீபம் இருக்க நெருப்பைத்தேடுவீர்கள்.

(கு-ரை) "புகழுமூவரி லுருத்திரமூர்த்தி பொங்கொளியிற், றிசபூஞாயிறு வைசசளிற் செம்பொன் சிலம்பு, பசருமந்திரத் தஞ்செழுத் தென்னவே பலவா, நகரின் மேன்மை பெற்றது கமலாலயநகரம்" என்றபடி இத்தலத்தில் திருவிழாவைத் தரிசித்தபின் வேறுதலத்தின் திருவிழாவைத் தரிசிக்க மனம் வாராதாகலின், ஊரூர்கடோறுமுழலுவீர், என்றனர். (5)

எருவாய்க் கிருவிரன்மே லேறுண் டிருக்குங்
கருவாய்க்கோ கண்கலக்கப் பட்டாய்—திருவாரூர்த்

தேரோடும் வீதியிலே செத்துக் கிடக்கின்றாய்
நீரோடும் தாரைக்கே நீ.

(பொ-ரை.) மலத்துவாரத்திற்கு இரண்டங்குலத்திற்கு மேலே எறிய புழுக்கூடாகிய பிறப்பிடத்திற்குக் கண்கலங்கினை, திருவாரூரின்கண் தேரோடும் திருவீதியில், நீரோடும் வழியின்பொருட்டு நீமாண்டுகிடந்தாயே.

(கு-ரை.) தன்னையடுத்திருந்த ஒருநல்லடியார் தன்கட்டளைப்படி விவாகஞ்செய்து வாழ்ந்துகொண்டிருக்கையில் பெண்சம்பந்தமான சுகஜன்னிகண்டு மாண்டுபோக அதுதெரிந்து அவனைப் சமீபித்து இத்திருச்செய்யுளைப்பாடி எழுப்பிவிட்டனர். (6)

## திருக்காளத்தி.

பொய்மை யொழியாப் புலாலைவிடாய் காளத்தி
ஐயரே யெண்ணு யறஞ்செய்யாய்—வெய்ய
சினமே யொழியாய் திருவெழுத்தைந் தோதாய்
மனமே யுனக்கென்ன மாண்பு.

(பொ - ரை.) மனமே! பொய்பேசாதிராய், புலாலுண்ணுதலினின்றும் நீங்காய், திருக்காளத்திநாதரை நினைக்கமாட்டாய், சிவதருமத்தினைச் செய்யாய், கொடியகோபத்தினை நீங்காய், அழகிய பஞ்சாட்சரத்தினைச் செபியாய், உனக்கென்ன பெருமையுண்டாகப்போகிறது.

(கு - ரை.) ஒருவன் மனிதப்பிறப்பை யெடுத்து அதனாலடையவேண்டிய அரியபாக்கியத்தை யடையவேண்டுமாயின் நீக்கவேண்டுவன சில, கொள்ளவேண்டுவன சில, அவையாவன பொய்,

புலால் கோபம் இவற்றையொழித்தல் வேண்டும். சிவசிந்தனை, சிவதருமசிந்தனை, பஞ்சாட்சரதியானம் இவற்றைப்பெறவேண்டும்.

## திருக்காஞ்சி.

எத்தனையூ ரெத்தனைவீ டெத்தனைதாய் பெற்றவர்கள்
எத்தனைபே ரிட்டழைக்க வேனென்றே—னித்தம்
எனக்குக் களையாற்று யேகம்பா கம்பா
வுனக்குத் திருவிளையாட் டோ.

(பொ - ரை.) திருவேகம்பமுடையானே! கம்பாநதி யுடையானே! எத்தனை ஊர்கள், எத்தனைவீடுகள், எத்தனை தாய்மார்கள் ஈன்றோர்கள், எத்தனை பேர்வைத்தழைக்க என் என்று விடைகொடுத்தேன், நாள்தோறும் அடியேனுக்கு விடாய்தணியாய் தேவரீருக்கு இது ஒரு திருவிளையாட்டா யிருக்கின்றதோ.

(கு - ரை.) எடுத்த செனனங்கட்கு எண்ணிக்கை இவ்வளவெனக் கணக்கிட முடியாதாகலினாலும், அந்தந்தச் சென்மங்கள்தோறும் அனுபவித்த துன்பங்கட்கு அளவில்லையாகலினாலும், அதனால் விடாயுற்றிருக்கு மெனக்கு இச்சென்மத்திலாவது அக்கவலைதீர்த்து இனிசென்மமெடாதபடி செய்வாயென்றார். 'களையாற்றாய்' என்றனர் 'திருவிளையாட்டோ' எனச் சந்தேகித்ததனால் திருவிளையாட்டன்று எனது கன்மமென்றபடியாம். (8)

## திருவிரப்பையூர்.

மாதா வுடல்சலித்தாள் வல்வினையேன் கால்சலித்தேன்
வேதாவுங் கைசலித்து விட்டானே—நாதா
விருப்பையூர் வாழ்சிவனே யின்னமோ ரன்னை
கருப்பையூர் வாராமற் கா.

(பொ - ரை.) (என்னைப்பெற்ற) தாய்மார்கள் உடம்பு தளர்ந்தார்கள், வலியவினையையுடைய நான் கால் ஓய்ந்துவிட்டேன், பிரமனும் கைதளர்ந்துவிட்டான், தலைவனே திருவிருப்பையூரில் வாழ்கின்ற சிவபெருமானே இனிமேலும் ஒருதாயினுடைய கருப்பையாகிய ஊரில்வந்து பொருந்தாமல் என்னைக்காத்தருள்வாயாக.

(கு - ரை.) எடுத்த சென்மங்கட்கு அளவில்லையாகலின் அவ்வளவு சென்மங்களிலும் என்னைப்பெற்ற தாய்மார்களும், சிருட்டித்த பிரமனும், கொன்ற இயமனும் சலித்து விட்டனர்களாகலின், இனி அவர்கட்குச் சிறிது ஆறுதலுண்டாகும்படி என்னைப் படையாதிருக்கவேண்டுமென்றனர்.

## திருக்கச்சிக்காரோணம்.

அத்தி முத லெறும்பீ றானவுயி ரத்தனைக்குஞ்
சித்த மகிழ்ந்தளிக்குந் தேசிகா—மெத்தப்
பசிக்குதையா பாவியேன் பாழ்வயிற்றைப் பற்றி
யிசிக்குதையா காரோ ணரே.

(பொ-ரை.) யானைமுதலாக எறும்பு ஈறாகவுள்ள எல்லா உயிர்கட்கும் மனமகிழ்ந்து அவைகள் வேண்டியவற்றைக் கொடுக்கின்ற ஆசாரியனே! மிகவும் பசிக்கின்றது ஐயனே! பாவியாகிய என்னுடைய பசியானது உதரத்தைப்பற்றி இழுக்கின்றது கடவுளே திருக்காரோணத்தி லிருப்பவரே!

(கு - ரை.) ஆன்மகோடிகட்கெல்லாம் அவரவர்கள் கன்மத்திற்குத் தக்கபடி உணவு ஊட்டிக் காத்துவருபவன் நீயேயாகலின் அவ்வான்மகோடிகளுள் ஒருவனாகிய நான்மாத்திரம் இங்ஙனம் பசியால் துக்கப்படலாமோ உடனே தணிக்கவேண்டுமென்பர். 10

## திருக்குற்றாலம்.

காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடைவாய் படுமுன்னே—மேல்விழுந்தே
யுற்றா ரழுமுன்னே யூரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு.

(பொ-ரை.) எமன் நெருங்கிவதற்குமுந்தியே, கண்பஞ்சடைவதற்கு முந்தியே, பாலுண்டகடைவாய்ப்பல் விழுவதற்கு முந்தியே, உறவினர் மேலே விழுந்து அழுவதற்குமுந்தியே, ஊரிலுள்ளார் மயானத்திற்குக் கொண்டுபோய்ச் சுடுவதற்குமுந்தியே, திருக்குற்றாலத்திலெழுந்தருளியிருக்கும் சிவபெருமானைத்துதிப்பாயாக.

(கு-ரை.) மரணத்தருவாயில் இந்திரியங்கள் கலங்கிவிடுமாகலின் அச்சமயத்தில் நினைப்பதற்கேதுவாகிய கரணங்களும் அங்ஙனமேயாகும். ஆதலின் அறிவானது தெளிவாக விருக்கிற காலத்திலேயே சிவத்தியானம் பண்ணுதல் வேண்டுமென்றார். (11)

## திருவையாறு.

மண்ணுந் தணலாற வானும் புகையாற
வெண்ணரிய தாயு மிளைப்பாற—பண்ணுமயன்
கையாற வும்மடியேன் காலாற வுங்கண்பா
ரையா திருவை யாறா.

(பொ-ரை.) என்தந்தையே! திருவையாற்றி லெழுந்தருளியிருப்பவனே! பூமியானது (தன்னுடைய) அனல் அடங்கும்படியாகவும், ஆகாயமானது (தன்னுடைய) புகையடங்கும்படியாகவும், (என்னைச் செனனங்கள்தோறும் பெற்றெடுத்த) அநேகதாய்மார்

ன் இளைப்பாறம்படியாகவும், சிருஷ்டிசெய்யும் பிரமன்கையாலும்
யாகவும், அடியேனுடையகால்கள் ஆறும்படியாகவும்திருநோக்கம்
வைத்தருளவேண்டும்.

(கு-ரை.) எடுத்தசெனனங்கட்குக் கணக்கில்லையாகலின் அவ்
வ் செனனங்கடோறும் மரணகாலத்தில் கொளுத்தியபோது
ண்டாகிய நெருப்பும்புகையும், பிறந்தகாலத்தில் தாய்மார்க்குண்
ாகிய நோயும், பிரபஞ்சபோகத்தினை யனுபவிக்கும்படி பிரமன்
ழுதிவந்தமையும், அங்ஙனம் போகங்களை யனுபவிக்கிற காலத்
ில் உலகமெங்குந் திரிந்தலுத்தகாலும் இளைப்பாற அதாவது
னிச்சென்மம் வாராதபடி திருவடியிற்சேர்த்துக்கொள்ளவேண்டு
மன்பதாம். (12)

## சிதம்பரம்.

ற்றம் பலமுஞ் சிவனு மருகிருக்க
வற்றம் பலந்தேடி விட்டோமே—நித்தம்
றந்திடத்தைத் தேடுமே பேதைமட நெஞ்சங்
றந்திடத்தை நாடுமே கண்.

(பொ-ரை.) திருச்சிற்றம்பலமும் (அவ்வம்பலத்தில் ஆனந்த
ர்த்தம் செய்தருளும்) நடராஜப்பிரபுவும் சமீபத்திலிருக்க வெறு
மயாகிய அம்பலத்தைத் தேடிக்கொண்டோமே (என்னெனின்)
றியாமையினையும் மடமையினையும் வாய்ந்த மனமானது எந்நா
ும் தான் பிறந்தவிடத்தினையே தேடாநின்றதே, கண்ணானது
ான் (பால்) உண்ட இடத்தினையே நாடுகின்றதே.

(கு-ரை.) பிறப்பதற்கிடமாயுள்ள நிதம்பமும் பாலுண்பதற்கு
மாயுள்ள தனமும் ஒவ்வொருவரையும் மயக்கிக் காமத்தை
ட்டுவதற்கேதுவாகப் பிரபஞ்சத்திலிருந்து கொண்டிருத்தலி

ஞல், அம்மயக்கிற் சிக்காது உலகத்திலுள்ள மாதரனைவரையும் தாய்மார்களாகப் பாவித்து வாழவேண்டுமென்பதாம். (13)

## போது.

தோடவிழும் பூங்கோதைத் தோகையுனை யிப்போது
தேடினவர் போய்விட்டார் தேறியிரு—நாடிநீ
என்னை நினைத்தா லிடுப்பி லுதைப்பேனுன்
உன்னை நினைத்தா லுதை.

(பொ-ரை.) இதழானது விரியாநின்ற புட்பமாலையினைத் தரித்தபெண்ணே! உன்னை இப்போது தேடினவர் போய்விட்டார் மனந்தெளிந்திரு, இனி நீ என்னை விரும்பி நினைத்தாயாயின், நானுன்னை இடுப்பிலுதைப்பேன், இனி உன்னை நினைத்தேனாயின் நீ என்னை உதை.

(கு-ரை.) அநேககோடி சென்மாந்தரங்களினும் மாதருடன் கலந்துகலந்து மயங்கிக்கிடந்த மனமானது ஒரேவழி தன்னையறியாது எதிரிட்டமாதொருவள்பால் நாடி அவளை வசியம் செய்துவிட உடனே தன்மனத்தைத் தன்வழித் திருப்பிக்கொண்டு அம்மாதினை நிக்கிரகித்தபடியாம். சாமானியர் மனத்தின்வழி அறிவினைவிட்டுமயங்குவர் அறிஞர் அம்மனத்தினை அறிவால் தன்வயப்படுத்திடுவர் எத்தகையினராயினும் பிராரத்துவத்தை யனுபவித்தேதீரவேண்டும், ஆனல் அபக்குவர்கட்கு அனுபவமாயும் பக்குவர்கட்கு வாசனை மாத்திரமாயும் நிகழும், ஈண்டுச் சுவாமிகள் பால் நேர்ந்தது பூர்வவாசனையேயாம். (14)

வாசற் படிகடந்து வாராத பிச்சைக்கிங்
காசைப் படுவதில்லை யண்ணலே—பாசைதனைப்

பட்டிறந்த காலமெலாம் போதும் பரமேட்டி
சுட்டிறந்த ஞானத்தைச் சொல்.

(போ-ரை.) பெருமையிற் சிறந்த பெருமானே! நான் வாசற் படியைக்கடந்து தாண்டிக்கொண்டுவந்து இடாத பிச்சைக்கு இப் போது ஆசைப்படுவதில்லை (அங்ஙனம்) அப்பிச்சைக்கு ஆசைகொ ண்டிருந்து கழிந்தகாலமனைத்தும் போதும், இனிக்குறித்துச்சொ ல்லுதற்கேலாத ஞானோபதேசம் செய்தருளுவாய்.

(கு-ரை.) ஒன்றினைச்சுட்டில் சுட்டுவானாகிய ஞாதுருவும், மன மாகிய ஞானமும், சுட்டப்படும் பொருளாகிய ஞேயமும் முளைந்து தோன்றுமாகலின், சுட்டிறந்தஞானம்வேண்டும் என்றனர். ஞானம் மனமாலை. "என்னை மாணவகா வீதென்று சுட்டாதே, பன்னு ளுமுண்மைதனைப் பாராதே—நின்னாலே, யொன்றலது வொன்று தங் குன்னையொன்றாயே, லொன்றுமிரண்டல்லாத வொன்று" என்றதனாற் காண்க. 2

நச்சரவம் பூண்டானை நன்றாய்த் தொழுவதுவு
பிச்சையிலே தானங் கிருப்பதும்—பிச்சைதனை
வாங்குவது முண்பதுவும் வந்துதிரு வாயிலிலே
தூங்குவதுந் தானே சுகம்.

(போ-ரை.) விஷத்தினையுடைய பாம்பினைத் தரித்தபரமசி வனை நன்றாக வணங்குவதும், தன்னிஷ்டப்படி யிருந்துகொண் டிருப்பதும், பிச்சையெடுப்பதும், சாப்பிடுவதும், வந்து சிவாலய வாயற்படியிலேயே நித்திரைசெய்வதும் தானே இன்பமாகும்.

(கு-ரை.) இன்றியமையா துண்டாகும் பசியினை மாத்திரம் தணித்தற்குப் பிச்சையேற்றுண்டு சிவாலயதரிசனம் செய்தபின்

அக்கோயில் வாயற்படியிற் கிடத்தலே சுகமென்றனர். அதனால் எத்தகையினர்கட்கும் சிவாலய வழிபாடொன்றே மோட்சந் தருமென்பதாம். இதுபற்றியன்றோ, "திருக்கோயிலில்லாத திருவில்லூரும்" எனவும், 'ஆலயம் தொழுவது சாலவுநன்று' எனவும், "கோயிலில்லாதவூரில் குடியிருக்க வேண்டா மெனவும்" பெரியோர் பணித்துள்ளார். 3

இருக்கு மிடந்தேடி யென்பசிக்கே யன்ன
முருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன்—பெருக்க
வழைத்தாலும் போகே னரனே யென்றேக
மிளைத்தாலும் போகே னினி.

(பொ - ரை.) சிவபெருமானே! நானிருக்கும் இடத்தினைத் தேடி என்பசியினைத் தணித்தற்கு அன்னத்தினைப் பரிவுடனே கொண்டுவந்தால் புசிப்பேன், அங்ஙனம் செய்யாமல் மிகவும் வருந்தி யழைத்தாலும் போகமாட்டேன், எனது தேகமெலிந்தாலும் இனிப்போகமாட்டேன்.

(கு-ரை.) பசியைத் தணித்தலின் பொருட்டு அன்னத்திற்கென வெளிவரின் வீதிகடோறும் ஒவ்வொரு வீட்டிலும் செல்லவேண்டியிருக்கின்றது, அவ்வவ்வீட்டிலுள்ள சாமான்யரை யெல்லாம் கெஞ்சவேண்டியு மிருக்கிறது, அவ்வமயம் மெய்-வாய்-கண்-மூக்குச்செவி, முதலிய வற்றிற்குப் பிரபஞ்சவேடிக்கை விளைகின்றது, அவ்விளைவின் வழியே மனம் செல்லுகிறது, செல்லவே இச்சை விளைகின்றது, இச்சை விளையவே அவ்விச்சையினை யனுபவிக்க முயற்சி உண்டாகின்றது, அம்முயற்சியில் இன்பதுன்பம் விளைகின்றன, அவை புண்ணிய பாவங்கட் கிடமாய்ப் பிறப்பினுக்கேது உண்டாகின்றது, இத்தகையவிபரீதங்கட் கிடங்கொடாதபடியிருந்த விடத்திலே யிருத்தலே நலமென்பார். "போகேனினி" என்றனர்.

விட்டுவிடப் போகுதுயிர் விட்டவுட னேயுடலைச்
சுட்டுவிடப் போகின்றார் சுற்றத்தார்—பட்டதுபட்
டெந்நேர முஞ்சிவனை யேத்துங்கள் போற்றுங்கள்
சொன்னே னதுவே சுகம்.

(பொ-ரை.) ஜகத்தீரே! உயிரானது உடலைவிட்டு நீங்கப் போகிறது, உயிர்நீங்கினவுடன் சரீரத்தினை உறவினர் சுட்டுவிடப் போகின்றார், ஆகையால் என்னபாடு பட்டாயினும் எப்பொழுதும் சிவபெருமானைத் துதியுங்கள் வணங்குங்கள் சொல்லிவிட்டேன் அதுவேசுகமானது.

(கு-ரை.) உலகத்திலே ஒருவன் நற்கதியினை யடையவேண்டியதற்கேற்ற சாதனங்கள் உடலுடன் உயிர் கூடியிருக்கும் காலத்திலேயே சம்பாதித்துக்கொள்ளவேண்டும். உடலோ அடுத்தகணம் நமது வசத்திலிருப்பது துல்லபம் ஆகலின், உடலோடிருக்கும் காலமெல்லாம் ஒவ்வொரு கணந்தோறும் சிவசிந்தனையுடனிருக்கவேண்டுமென்பார் "எந்நேரமும் சிவனை யேத்துங்கள்" என்றனர். 5

ஆவியொடு காய மழிந்தாலு மேதினியில்
பாவியென்று நாமம் படையாதே—மேவியசீர்
வித்தார முங்கடம்பும் வேண்டா மடநெஞ்சே
செத்தாரைப் போலே திரி.

(பொ-ரை.) அறியாமை வாய்ந்த மனமே! உயிருடன்கூடிய சரீரமானது அழிந்துபோனாலும் உலகத்திலே பாவியென்ற பேரினைப் படைக்காதே, பொருந்திய சிறப்பினைவாய்ந்த விஸ்தாரவார்த்தையும் உலகவுறவும் உனக்கு வேண்டாம் மாண்டவர்போலத் திரிவாயாக.

(கு-ரை.) உலகத்தில் விகாரமுள்ளவரையில் நன்மை தீமைகட்கு கேதுவாகிய விஷயங்களுள சிக்குண்ணவரும் அங்ஙனம் சிக்

கவே எவ்வழியிலாவது பாவியென்றே பேருண்டாம் ஆகலின், மவுனம்பூண்டு நடைபிணம்போ லிருந்து கொண்டிருத்தலே யுத்தம மென்றனர். "பாவியென்ற பேர்படைத்துப் பாழ்நரகில் வீழாமல், ஆவிநின்ற சூத்திரத்தை யறிவதினி யெக்காலம்" என்றனர் பத்திரகிரியாரும். 6

---

## பின்முடுகுநேரிசை வெண்பா

இப்பிறப்பை நம்பி யிருப்பையோ நெஞ்சகமே
வைப்பிருக்க வாயின் மனையிருக்கச்—சொப்பனம்போல்
விக்கிப்பற் கிட்டக்கண் மெத்தப்பஞ் சிட்டப்பைக்
கக்கிச்செத் துக்கொட்டக் கண்டு.

(பொ-ரை.) மனமே! செல்வமிருக்க, வீடும் மனைவியுமிருக்க கனவினைப்போல நிலையிலதாகி விக்கலெடுத்து பற்கள்கிட்டி விட, கண்கள் மிகவும், பஞ்சடைந்து நீரையும் கோழையையும் கக்கி, இறந்துசாப்பறை யடித்தலைக்கண்டிருந்தும் இந்தச் சென்மத்தினை நம்பியிருப்பரோ (அறிவுடையோர்கள்.)

(கு-ரை.) அனுபவிக்க வேண்டிய சகல போகங்களும் குறைவறவிருக்க அவற்றையெல்லாம் விட்டுக் கணத்திலிறந்து விடும் உண்மையினைப் பிரத்தியட்சமாகத் தினமும் கண்டும் இவ்வுடலில் அபிமானம் வைத்துக்கொண்டு எம்பெருமானை மறந்திருப்பது தகுதியாமோ என்றனர். 7

மேலு மிருக்க விரும்பினையே வெள்விடையோன்
சீல மறிந்திலையே சிந்தையே—கால்கைக்குக் [வுடல்
கொட்டையிட்டு மெத்தையிட்டுக் குத்திமொத்தப் பட்ட
கட்டையிட்டுச் சுட்டவிடக் கண்டு.

(பொ - ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! சிலந்தி பூச்சியிலிருந்து நூல் உண்டானதுபோல ஆன்மாவிடத்து நீ தங்கியிருந்த தன்மையினைப் பார்த்தறியாமல் தீமையுற்றேன்.

(கு-ரை.) சிலந்தியானது தன்னுடலிலே யிருந்து நூலினையுண்டாக்கி பற்பலவிதமாக கூடுகள் கட்டுவதைப்போல, தேவரீர் மாயையினிடத்திலிருந்து உலகத்தை பற்பலவிதமாகசிருஷ்டிக்கும் உன்னை விசாரித்துணராது விழலனேன் என்பார் 'நலமழிந்தேன்' என்றனர். 42

குருவாய்ப் பரமாகிக் குடிலைசத்தி நாதவிந்தாய்
அருவா யுருவான தறிகிலேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! குருவாகியும், பரம்பொருளாகியும், சுத்தமாயையாகியும், சத்தியாகியும், நாதமாகியும், விந்துவாகியும், அருவாகியும், உருவாகியும் நின்ற உண்மையினையறிந்தேனில்லை.

(கு-ரை.) சகலவான்மாக்களைத் தடுத்தாளும்பொருட்டு ஆசாரியகோலங்கொண்டு வருபவனுகலின் குருவாயெனவும், எல்லாருக்கு மேலானவனுகலின் 'பரமாகி' யெனவும், சுத்தமாயையினையும், நாதவிந்துக்களையும் காரியப்படுத்த வல்லனுகலின் 'குடிலைநாதவிந்தமாய்' எனவும், சத்தியினைத் திருமேனிகொண்டு விளங்குபவனுகலின் 'சத்திசிவமெனவும்' சொரூபத்தில் நிஷ்களமாயும் தடத்தத்தில் சகளமாயும் விளங்குபவனுகலின் அருவாயுருவாயெனவுங் கூறினர்.

ஒளியாய்க் கதிர்மதியா யுள்ளிருளா யக்கினியாய்
வெளியாகி நின்ற வியனறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! சோதியாய்ச் சூரியசந்திரராய் ஆணவவிருளாய், தீயாய் ஆகாயமாயிருந்த ஆசிரியனைத் தெரியேன்.

(கு-ரை.) ஒளி, கதிர், மதி, மலம், அக்கினியாவும் சிவபெருமானையன்றிக் காரியப்படாதாகலினாலும், தான் சிதாகாயமான வெளியாகி நிற்பவனாகலினாலும் 'வியனறியேன்' என்றனர். 44

இடையாகிப் பிங்கலையா யெழுந்த சுழிமுனையாய்
உடலுயிராய் நீயிருந்த வுளவறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! இடகலை நாடியாகியும், பிங்கலை நாடியாகியும், சுழிமுனை நாடியாகியும், உடலின் கண்ணே உயிராயும் தேவரீரெழுந்தருளியிருந்த தந்திரத்தினையறியேன்.

(கு-ரை.) மூவகைப்பட்ட பிரணவாயு காரியப்படுத்துவதும், உடலிலே உயிர் நிலைபெற்றிருத்தலும், சிவபெருமான் பிரேரபனையாகலின் அவ்வுண்மை தெரிந்துகொள்ளவில்லையென்பார் 'உளவறியேன்' என்றனர். 45

மூலவித்தாய் நின்றுமுளைத் துடல்தோறு மிருந்து
காலனென வழிக்குங் கணக்கறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! (ஆன்மாக்கள் உண்டாவதற்குக்) காரணமாயிருந்து தோன்றியபின் அவர்களுடலில் நிலைத்து இயமனாகவிருந்து சங்கரிக்கும் உண்மையறியேன்.

(கு-ரை.) ஆன்மாக்களி னனுக்கிரகார்த்தமாக உண்டாக்குதலும், காத்தலும், அழித்தலும் ஆகிய தொழிலுண்மை தேரேனென்பார் 'கணக்கறியேன்' என்றனர். 46

உள்ளும் புறம்புமா யுடலுக்கு ணீயிருந்த
தெள்ளளவு நானறியா திருந்தேனே பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! தேகத்தினிடத்து உள்ளேயும் வெளியிலேயும் எழுந்தருளியிருந்த தன்மையினைச் சிறிதும் தெரிந்துகொள்ளா திருந்தேன்.

(கு-ரை.) கன்மத்திற்குத் தக்கபடி ஆன்மாவின் உயிருக்குயி ராயிருந்து நடப்பித்தும், பிரபஞ்சபோகத்தினை யூட்டுவித்தும், நிற்பவன் சிவபெருமானென்பதனைச் சிறிதும் தெரிந்துகொள்ள வில்லை யென்பார். 'அறியா திருந்தேன்' என்றனர். 47

தாயாகித் தந்தையாய்த் தமர்கிளைஞர் சுற்றமெல்லாம்
நீயாகிநின்ற நிலை யறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! அன்னையாகியும், பிதாவாகியும், உறவினராகியும், தேவரீராகியு மிருந்த நிலையினை யறியேன்.

(கு-ரை.) ஒருவனுக்கு உலகத்தின் கண்ணே உதவியாக விருப் பவரைக் கூட்டிவைப்பவனும், இவர்கட்கு அன்னியமாக விருப் பவனும், சிவபெருமானே யென்னும் தன்மையினைத் தேரேனென் பார் 'நிலையறியேன்' என்றனர். 48

விலங்குபுள் ளூர் வனவசரம் விண்ணவர் நீர்ச்சாதிமனுக்
குலங்களெழு வகையில்நின்ற குறிப்பறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! விலங்கு, புள், ஊர் வன, தாவரம், மக்கள், நீர்வாழ்வன, ஆகிய பிறப்புக்கள் எழு வகையினுமிருந்த தேவரீர் மகிமையை அறியேன்.

(கு-ரை.) எழுவகைப்பட்ட பிறப்புக்களினும் அவ்வவ்வற்றின் கன்மத்திற்குத் தக்கபடி தனுகரண புவனபோகங்களைக் கூட்டி வைப்பவன் சிவபெருமானென்னும் கருத்தையறியே னென்பார் "குறிப்பறியேன்' என்றனர். 49

ஆணாகிப் பெண்ணா யலியாகி வேற்றுருவாய்
மாணாகி நின்ற வகையறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! ஆணாகவும், பெண்ணாகவும், அலியாகவும். இவைகளைக்கடந்த வேறுபட்ட உருவமாகவும், பெருமையுடனின்ற தன்மையினையறியேன்.

(கு-ரை.) ஆன்மா வொன்றினை அதன் கன்மத்திற்குத் தக்கபடி அவன் ஆகவும், அவளாகவும். அலியாகவும், அதுவாகவும் சிருஷ்டிப்பவன் சிவபெருமானே யென்னும் தன்மைதெரிந்தேனில்லை யென்பார் 'வகையறியேன்' என்றார். 50

வாலையாய்ப் பக்குவமாய்ப் புகழ்வா ரிதியாகி
பாலையாய் நின்ற பயனறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! பாலை,வாலை, யௌவனம், மூப்பு ஆகியிருந்த பிரயோசனத்தினைத் தேரேன்.

(கு-ரை.) மரணமானது எப்போதுமேயிருக்கினும் பிராரத்துவத்தினை யனுபவிக்குமளவும் தேகமிருக்குமாகலின் பலபருவங்கள் வரையில் தேகமிருப்பது கன்மத்தளவு என்பதாம். 51

பொய்யாய்ப் புவியாய்ப் புகழ்வா ரிதியாகி
மெய்யாகி நின்ற வியனறியேன் பூரணமே.

(பொ-ரை.) பொய்யாகியும், பூமியாகியும், புகழப்படும் சமுத்திரமாகியும், மெய்யாகியும் இருந்த ஆச்சரியமறியேன்.

(கு-ரை.) தெய்வமில்லையென்பார்பால் பொய்யாகியும் உண்டென்பவர்பால் மெய்யாகியும், மண் நீர் என இரண்டாகக் கூறப்பட்ட பிரபஞ்சம் காரியப்படுவதற் கேதுவாகியும், சிவபெருமானிருத்தலாகிய உண்மையினை யறியேனென்பார் 'நயமறியேன்' என்றனர்.

பூவாய் மணமாகிப் பொன்னாகி மாற்றாகி
நாவாய்ச் சொல்லான நயமறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! பூவாகியும் அதன் வாசனையாகியும், பொன்னாகியும் அதன் மாற்றாகிய பிரகாசமாகியும் அதன் சொல்லாகியுமுள்ள அருமையினையறியேன்.

(கு-ரை.) புட்பத்தில் மணமும் பொன்னில் மாற்றும், நாவில் சொல்லும்,ஒருமைப்பட்ட சம்பந்தமுற்றுச் சிவமும் சத்தியும் விளங்கும் மெய்யினைத் தேர்ந்தேனில்லை யென்பார் 'நயமறியேன்' என்றனர். 63

முதலாய் நடுவாகி முப்பொருளாய் மூன்றுலகா
யிதமாகி நின்ற வியலறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைகின்ற பொருளே! ஆதியாகியும், நடுவாகியும், அந்தமாகியும் முத்தேவர்களாகியும், மூன்றுலகங்களாகியும், நன்மையாகியும் இருந்த தன்மையினைத் தெரியேன்.

(கு-ரை.) ஆதியந்தமில்லாதவனாயிருந்தும், ஆதியந்தமுடையவன்போலிருந்தும், மும்மூர்த்திகளை யதிட்டித்துக் கொண்டு மூவலகங்களையும் காத்து எல்லாநன்மையினையும் ஆன்ம கோடிகட்குச்

செய்துவருபவருடைய தன்மையினைத் தேறேனென்பார் 'இயலறி
யேன்' என்றனர். 54

ஊனா யுடலுயிரா யுண்ணிறைந்த கண்ணொளியாய்த்
தேனாய் ருசியான திறமறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! மாமிசமாகிய உட
லில் உயிராகியும் உயிருள் நிறைந்த கண்ணில் ஒளியாகியும், தேனா
கியும் அதன் சுவையாகியும் இருக்குந் தன்மையினை யறியேன்.

(சு-ரை.) ஆன்மாவினுள் பரமான்மாவாக விருந்து நடப்பிக்
கிறதானாலேயே ஊனாகி நிலைத்திருத்தலினால் அவ்வுண்மை யறியே
னென்பார் 'திறமறியேன்' என்றனர்.

வித்தாய் மரமாய் விளைந்தகனி யாய்ப்பூவாய்ச்
சித்தாகி னின்ற திறமறியேன் பூரணமே.

(பொ-ரை.) வித்தாகியும் (அதன்காரியமான) மரமாகியும் (அம்
மரத்திலுண்டாகும்) பழமாகியும் (அப்பழத்திற்கேதுவாகிய) புட்ப
மாகியும் அறிவு சொரூபமாகி நின்ற உண்மையறியேன்.

(சு-ரை.) அசுத்தமாயுள்ள ஒருவிதை பலவகையாகக் காரியப்
படுகிறதற்கு ஏதுவாயுள்ளதைப்போல, சித்துருபனாயுள்ளவனே
காரணமென்பதனைத் தேறேனென்பார் 'திறமறியேன்' என்றனர்.

ஐவகையும் பெற்றுலக வண்டபகி ரண்டமெல்லாந்
தெய்வமென நின்ற திறமறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! பஞ்சகிருத்தியங்க
ளைச்செய்து உலகங்கள் முழுவதிலும் தெய்வமாக எழுந்தருளி
யிருக்கின்ற உண்மையறியேன்.

(கு - ரை.) எல்லாவுலகத்திலுமுள்ள ஆன்மகோடிகளுக்குப் பஞ்சகிருத்தியம் நடத்த, அதனாலேயே எல்லாரும் தெய்வமுண்டென்று வழிபடுதற் கேதுவாயுள்ள உண்மையறியேனென்பார், 'திறமறியேன்' என்றனர்.

மனமாய்க் கனவாகி மாய்கையா யுள்ளிருந்து
நினைவாகி நின்ற நிலையறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! மனமாகியும், (அம்மனத்தில் விளையும்) கனவாகியும் மாயமாக உள்ளேயிருந்து நினைப்பனவாயிருந்த நிலையினையறியேன்.

(கு-ரை.) உடலின்கண்ணே ஆன்மாவானது அவஸ்தாபேதமடைதற்குக் காரணமும், சிவபெருமானென்ற தன்மையினையறியே னென்பார் 'நிலையறியேன்' என்றனர். 58

சத்திசிவ மிரண்டாய்த் தான்முடிவி லொன்றாகிச்
சித்திரமாய் நின்ற திறமறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! சத்திசிவமென்னும் இரண்டுபொருளாகியும், முடிவில் ஒருபொருளாகியும் விசித்திர தன்மையதாகவிருந்த உண்மையறியேன்.

(கு-ரை.) சிவமொன்றே புனர்சிருஷ்டியில் ஞாயிறும் அதனொளியும்போல இரண்டென்னச் சிவசத்தியாகி இலயகாலத்தில் சத்தி சிவத்திலொடுங்கச் சிவமேயாகவிருந்த உண்மையினை விசாரித்தறியேனென்பார் 'திறமறியேன்' என்றனர். 59

பொறியாய்ப் புலனாகிப் பூதபே தப்பிரிவாய்
அறிவாகி நின்ற வளவறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்குநிறைகின்ற பொருளே! ஐம்பொறிகளாகவும், ஐம்புலனாகவும், ஐம்பூதங்களாகவும் அவற்றின் பேதங்களாகவும் அறிவு சொரூபமாகவு மிருந்த அளவினையறியேன்.

(கு-ரை.) ஞானேந்திரிய முதலிய தத்துவமனைத்தும் காரியப்படுதற்கேதுவாக அவற்றினைப் பிரேரேபித்துதாக்கற்றுச் சித்ரூபமாகவிருந்து கொண்டிருக்கின்ற தன்மையையறியேனென்பார் 'அளவறியேன்' என்றனர்.

வானிற் கதிர்மதியாய் வளர்ந்துபின்னொன் றானதுபோல்
ஊனுடலுக் குள்ளிருந்த வுயிர்ப்பறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! ஆகாயத்தின் கண்ணே சூரிய சந்திரர்களாய் விளங்கி அமாவாசையில் ஒரு தன்மையானதுபோல ஊனுடன் கூடிய தேகத்திற்குள்ளிருந்து பிராணனொடுங்கும் தன்மையை அறியேன்.

(கு-ரை.) சகலகேவலமற்ற அவசரத்தில் இரவு பகல் தோன்றாது அருளொளியொன்றே தோன்று மென்பார், இருள் ஒளி ஒன்றானதுபோல் தேகத்தினிடத்தே பிராணவாயு சஞ்சரிக்கும் விதமறியே னென்பார் 'உயிர்ப்பறியேன்' என்றனர். 11

பொய்யும் புலையுமிகப் பொருந்திவீண் பேசலன்றி
ஐயோ வுனைவுரைக்க வறிகிலேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! பொய்மையும் புலாலுண்ணுதலையும் அதிகமாகப்பெற்று வீண்வார்த்தை பேசுதலையொழிய அந்தோ! தேவரீரைத் தியானிக்கத் தெரிந்தேனில்லை.

(கு-ரை.) நாள் முழுவதும் பிழைத்தற்குப் பொய் பல பேசுதலும், உடலைப் பெருத்தற்குப் புலாலுண்ணுதலுமாகிக் காலத்தினைக் கழித்தேனேயன்றித் தெய்வசம்பந்தமாக வொன்றும் செய்தேனில்லை யென்பார் 'அறிகிலேன்' என்றனர். 62

நிரந்தரமா யெங்கு நின்றுவிளை யாடினதைப்
பரமதுவே யென்னப் பதமறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! நித்தியமாக எங்குமிருந்துகொண்டு விளையாடிக்கொண் டிருப்பதாகிய பரமசிவத்தைப் பொருளென்னும் தன்மையினைத் தேரேன்.

(கு-ரை.) சர்வ வியாபகமாக எங்குநிறைந்துகொண்டு பிரபஞ்ச காரியம்,செய்துவராநின்ற பரம்பொருளாகிய வஸ்துவை உணர்ந்துகொண்டே னில்லை யென்பார் 'பதமறியேன்' என்றனர். 63

கொல்வாய் பிறப்பிப்பாய் கூடவிருந் தேசுகிப்பாய்
செல்வாய் பிறர்க்குட் செயலறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! சங்காரம்செய்வாய் சிருஷ்டிப்பாய் உடனிருந்து காத்துவருவாய், உள்ளுணர்வாயிருந்துகொண்டிருப்பாய் இக்காரியத்தினைத் தெளிந்தேனில்லை.

(கு-ரை.) ஆன்மாக்கட்கு முத்தொழில் செய்வதுடன்; உள்ளும் புறம்புமாய் விளங்குங் காரியத்தைத் தெரிந்துகொண்டேனில்லையென்பார் 'செயலறியேன்' என்றனர். 64

வாரிதியாய் வையமெல்லா மன்றுமண்ட பிண்டமெல்லாஞ்
சாரதியாய் நின்ற கலையறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! சமுத்திரமாய் உலகமனைத்தினும் நிலைபெற்ற அண்டபிண்ட சராசர மனைத்தினு மிருந்து நடத்துகின்ற தன்மையினைத் தேரேன்.

(கு-ரை.) நீரும் நிலனுமாகப் பிரிந்துள்ள சர்வாண்டங்களாகிய தேரினை நடத்துகின்ற வொருசாரதியினை யொப்பாகவிருந்துகொண்டிருக்கின்ற இடந்தேரேன் என்பார் 'தலமறியேன்' என்றனர்.

வித்தாய் மரமாய் வெளியா யொளியாய்
சத்தா யிருந்த தரமறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! விதையாகி, மரமாகி, ஆகாயமாகி, பிரகாசமாகித் தேவரீர் உண்மையாயிருந்த தன்மையைத் தேரேன்.

(கு-ரை.) யாவற்றிற்குங் காரணமாகியும், அவை காரியப்படுதற்கு எதுவாகியும், சிதாகாயமாகியும்அதனில் விளங்கும் அருட்சோதியாகியும்,நித்தியவஸ்துவாகியும் இருந்ததன்மையைஉணரேன் என்பார் 'தரமறியேன்' என்றனர். 65

தத்துவத்தைப் பார்த்துமிகத் தன்னை யறிந்தறிவால்
உய்த்துனைத்தான் பாராம லுய்வாரோ பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! தத்துவதரிசனஞ் செய்த பின்னர் ஆன்மாவாகிய தன்னைவிசாரித்து விசாரித்த அறிவைக்கொண்டு தேவரீரை ஆராய்ந்து தரிசியாமல் வாழ்பவர்கள் உச்சீவிப்பார்களோ.

(கு-ரை.) தத்துவ தரிசனம், ஆன்மதரிசனம் செய்தபின்னர் சிவதரிசனம் செய்ய முயலாது வாழ்பவர் அடையவேண்டிய பிரயோசனத்தினை யடையாரென்பார் 'உய்வாரோ' என்றனர். 67

ஒன்றா யுயிரா யுடல்தோறு நீயிருந்தும்
என்று மறியார்க ளேழைகள்தாம் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! ஒன்றாகியும், உயிராகியும், ஒவ்வொரு தேகந்தோறும் எழுந்தருளியிருக்கும் தன்மையை எக்காலத்தும் தெரிந்துகொள்ளார்கள் அறிவிலிகள்.

(கு-ரை.) ஒப்பற்ற ஒருதெய்வமாக இருந்தும், உயிருக்கு உயிராயிருந்தும், உடலினைக் காரியப்படுத்தியும், இருந்துகொண்டிருக்கிற உண்மையினைக் கல்வியில்லாதவர்கள் தெரிந்து கொள்ளுதலில்லை என்பார் 'அறியார்களேழை' என்றனர். 68

நேற்றென்று நாளையென்று நினைப்புமறப் பாய்ப்படைத்து
மாற்றமாய் நின்ற வளமறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! நேற்றையதினமென்றும், நாளையதினமென்றும், நினைவையும் மறதியையுமடைந்து வேறுபட்டிருக்கும் தன்மையறியேன்.

(கு-ரை.) இறந்தகாலம் எதிர்காலங்களில் கட்டுப்பட்டும் சகலகேவலமடைந்தும் இவற்றைக்கடந்து வாழவேண்டிய உண்மையைத்தேரேன் என்பார் 'வளமறியேன்' என்றனர். 69

மனம்புத்தி சித்த மகிழறிவாங் காரமதாய்
நினைவாந் தலமான நிலையறியேன் பூரணமே.

(போ - ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! மனம், புத்தி, சித்தம் களிக்கின்ற அறிவென்னும் ஆங்காரமாகியவைகளை அடக்குதற் கேதுவான இடத்தின் நிலையினைத்தேறேன்.

(கு - ரை.) அந்தக்கரணம் நான்கும் உண்டாவதற் கேதுவாயுள்ள தத்துவத்தின் உண்மைதெரிந்து அவற்றை யொடுக்கிக்கொண்டேனில்லையென்பார் 'நிலையறியேன்' என்றனர். 70

உருப்பேத மின்றி யுயர்ந்தசத்த பேதமதாய்க்
குருப்பேத மாய்வந்த குணமறியேன் பூரணமே.

(போ - ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! உருவத்தினால் வேற்றுமையின்றிச் சொல்லின் சத்தபேதத்தினாலேயே உருவமைந்ததென்ற உண்மையை யறியேன்.

(கு - ரை.) ஆண், பெண், அது என்னும் வேற்றுமைசொல்லின் சத்தத்தால் அமைந்த தேகவித்தியாசமேயன்றி (ஆன்மாவினுக்கொன்றுமில்லை) என்னும் உண்மைதேறேன் என்பார் 'குணமறியேன்' என்றனர். 71

சட்சமய பேதங்கள் தான்வகுத்துப் பின்னுமொரு
உட்சமய முண்டென் றுரைத்தனையே பூரணமே.

(போ - ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! ஆறுவகையான சமயபேதங்களையுண்டாக்கி மேலும் இவற்றையெல்லாம் அடக்கிக்கொண்டிருக்கின்ற உட்சமயமுளதென ஆசாரியகோலங்கொண்டெழுந்தருளித் தெரிவித்தனையே.

(கு - ரை.) அறுசமயங்களாவன:-பாடாணவாதசைவம், பேதவாதசைவம், சமவாதசைவம், சங்கிராந்த வாதசைவம், ஈசுவர

விகாரவாத சைவம், சிவாத்துவிதசைவம் ஆம். உட்சமயமாவது சித்தாத்துவித சித்தாந்த வைதிகசைவம். 72

முப்பத் திரண்டுறுப்பாய் முனைந்துபடைத்துள்ளிருந்த
செப்படி வித்தை திறமறியேன் பூரணமே.

(பொ - ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! முப்பத்திரண்டு அங்கங்களுடன் கூடிய ஒரு உடலினையுண்டாக்கி அவ்வுடலிலிருந்து கொண்டு செய்யும் சாமர்த்தியத்தினை யறியேன்.

(கு-ரை.) ஒருவனுக்கு கேசாதிபாதம் வரையிலுள்ள உறுப்புகள் முப்பத்திரண்டு இவ்வளவுமமைந்த ஒருவன் உயிருக்குயிராயிருந்து அவரவர்கள் கன்மத்திற்குத் தக்கபடிக் கூட்டிவைப்பவனென்பார் 'செப்படிவித்தை' என்றனர். 73

என்னதான் கற்றாலென் னெப்பொருளும் பெற்றாலென்
உன்னையறி யாதா ருய்வரோ பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! எவ்வளவு சாஸ்திரங்களைப் படித்திருந்தும் என்ன, எவ்வளவு செல்வ மடைந்திருந்து மென்ன? தேவரீரைத் தெரிந்துகொள்ளாதவர் உச்சீவிப்பரோ.

(கு-ரை.) தெய்வவுண்மை தோராதவர்கள் எவ்வளவு படித்தாலும், எவ்வளவு செல்வ மடைந்தாலும் சிறிதும் பிரயோசனமில்லையென்பதாம். 74

கற்றறிவோ மென்பார் காணார்க ளூன்பதத்தைப்
பெற்றறியார் தங்களுக்குப் பிறப்பறுமோ பூரணமே.

(பொ-ரை.) எங்கு' நிறைகின்ற பொருளே! கல்வி கற்றுத் தெரிந்து கொள்வோமென்பார் (கற்றபின்) நின்பதத்தைக்காணார் கள் உன்னருளைப் பெறாதவர்களின் பிறப்பு நீங்குமோ.

(கு-ரை.) மெய்கண்ட சாஸ்திர வாராய்ச்சியின்றி இலக்கிய இலக்கண நூல்கள் எவ்வளவு கற்றாலும் சிவபெருமான் உண்மையி னைத் தேராதவர்கள் செனனமும் மரணமும் நீங்கார்கள்.

வானென்பா ரண்டமென்பார் வாய்ஞ்ஞான மேபேசித்
தானென்பார் வீணர் தனையறியார் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! ஆகாயமே இருப் பிட மென்பர், அண்டத்திலுள்ள (பதங்க) ளென்பர், வாசா கைங் கரியம்பேசித் தானே (தெய்வமென்பர்) (இவரனைவரும்) தன்னை யாராய்ச்சி செய்யாதவர் ஆவர்.

(கு-ரை.) ஆன்மவிசாரணையில்லாத சிலர், சிவபெருமானுக்கும் பல இடங்களைக் கற்பிப்பார், சிலர்தானே பிரமமெனப்பிதற்றிவாய் ஞானம் பேசித்திரிவர் சிலர் 'தனையறியார்' என்றனர். 76

ஆதியென்பா ரந்தமென்பா ரதற்குநடு வாயிருந்த
சோதியென்பார் நாதத் தொழிலறியார் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! உற்பத்திசொல்லு வர், முடிவுசொல்லுவர், அவற்றிற்கு நடுவேயுள்ள சோதிசொரூப மென்பர், நாதசொரூபமாக விருக்கிற காரியத்தை யறியார்.

(கு-ரை.) முப்பத்தைந்து தத்துவங்களையும் கடந்த நாதசொ ரூபமாயுள்ள சிவத்தினுண்மையறியாதவர் பலவடிவமாக முடிவு கட்டிக் கூறுவர் தங்கள் தெய்வத்திற்கென்பதாம். (77

மூச்சென்பாருள்ளமென்பார்போகமெனுமோட்சமென்பார்
பேச்சென்பா ருன்னுடைய பேரறியார் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! சிலர் பிராணவாயு வென்பர், சிலர் மவுன நிலையான மோட்சமென்பர், சிலர் சத்த ரூபமென்பர், இவரனைவரும் தேவரீர் திருநாமத் துண்மையறியார்கள்.

(கு-ரை.) சிவபெருமானுக்குள்ள பெயரின் பரத்துவ உண்மையறியார், யாரும் பற்பலவிதமாகப்பிராணவாயுவே என்பாரும், மவுன நிலையே என்பாரும், சத்தரூபமே யென்பாருமாகி உழலுவரேயல்லாமல் 'பேரறியார்' என்றனர். 78

பரமென்பார் பானுவென்பார் பாழ்வெளி யாய்நின்ற
வரமென்பா ருன்றன் வழியறியார் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! சிலர் மேலான தென்பர், சிலர் சூரியனென்பார், சிலர் சூனிய வெட்ட வெளியாக விருக்கும் மேன்மைப்பொருளென்பர். இவரனைவரும் தேவரீரது உண்மையின் வழியறியார்கள்.

(கு-ரை.) சிவபெருமான் உண்மைத் தன்மையைப் பற்றிப் பிரதிபாதிக்கும் பதிநூல்களையாராய்ந்து பாராதார் பசுபாச நூல்களை நம்பித் தங்களுக்கு இஷ்டமானபடி பரத்துவம் சொல்லும் 'வழியறியார்' என்றனர். 79

எத்தனை பேரோ வெடுத்தெடுத்துத் தானுரைத்தார்
அத்தனைபேர்க் கொன்றுன தறிகிலேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! உலகில் எண்ணிலாதவர்கள் நின்பெருமையினைப் பற்பலவிதமாக வெடுத்துப்பேசி

னர்(அங்ஙனம் பேசினும்) அத்தனை பெயருக்கும் நீ ஒரு பொருளாகவே விளங்கிக்கொண்டிருக்கின்ற தன்மையறியேன்.

(கு-ரை.) சிவபெருமான் ஒருவனே அவரவர்கள் கன்மத்திற்குத் தக்கபடி அவரவர்கள் துதிக்கின்ற தெய்வமாகத் தானேயிருந்து அனுக்கிரகிப்பானாகலின் 'ஒன்றான தறிகிலேன்' என்றனர். ()

நகார மகாரமென்பார் நடுவே சிகாரமென்பார்
வகார யகாரமென்பார் வகையறியார் பூரணமே.

(பொ-ரை.) நகரவெழுத்தென்பர், மகரவெழுத்தென்பர், நடுவேயுள்ள சிகரவெழுத்தென்பர், வகரவெழுத்தென்பர், யகரவெழுத்தென்பர், இவற்றினுண்மை வகையினையறியார்.

(கு-ரை.) நகாரம் திரோதான சத்தியெனவும், மகாரம் மலமெனவும், சிகாரம் சிவமெனவும், வகாரம் சத்தியெனவும் யகாரம் ஆன்மாவெனவும், உண்மையினை விசாரித்தறியாரென்பார் 'வகையறியார்' என்றனர். 81

மகத்துவமாய்க் காம மயக்கத்துக் குள்ளிருந்து
பகுத்தறிய மாட்டாமற் பயனழிந்தேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! கௌரவமாய்க் காமமயக்கத்திற் சிக்குண்டு நன்மைதீமையென பிரித்தறியவாராது நான்பெறும் பிரயோசனத்தை இழந்தேன்.

(கு-ரை.) காமமயக்கத்திற் கட்டுப்பட்டு அதில் அதிகமாக அமிழ்ந்தி விட்டமையின், அவ்வின்பத்திற் கன்னியமாகவமைந்த பேரின்பமொன்று உண்டு என்னத் தெரிந்துகொள்வதற்கு எலாமையின் 'பயனழிந்தேன்' என்றனர். 82

உண்மைப் பொருளை யுகந்திருந்து பாராமற்
பெண்மயக்கத் தாலே பிறந்திருந்தேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! பரிபூரணசத்திய மானபொருள் தன்னை விரும்பியிருந்தும், தரிசியாமல் மாதரிடத்து வைத்த ஆசையால் வீணாகப்பிறந் திருந்தேன்.

(கு-ரை) மனிதப் பிறப்பெடுத்தும் மாதரிடத்துவைத்துள்ள மோகத்தினாலே, சிவபெருமானே உண்மையான தெய்வமெனத் தெரிந்தும் தரிசித்தற் கேலாதவனாயினேன் 'பிறந்திருந்தேன்' என்றனர். 88

வாயார வாழ்த்தி மகிழ்ந்துனைத்தான் போற்றாமல்
காய மெடுத்துக் கலங்கினேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! வாய்நிறம்ப வாழ்த்தி சந்தோஷத்துடன் வணங்கி தோத்தரியாமல்வீணாக தேக மெடுத்துக் கலக்கமுற்றேன்.

(கு-ரை.) எக்காலமும் உனைப் பாடுதலிலும், உன்னைக்கண்டு தரிசிப்பதிலும் பொழுது போக்காம லிருத்தலினாலே அநேகமான பிரபஞ்ச கலக்கம்வந்து போராடுகிறதென்பார் 'கலங்கினேன்' என்றனர். 84

சந்திரனை மேகமது தான்மறைத்த வாறதுபோற்
பந்தமுற யானுமுனைப் பார்க்கிலேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! சந்திரனை மேகமானது மறைத்துவிடுவதுபோல பாசபந்தமடைய அதனால் தேவரீரைத் தரிசித்தேனில்லை.

(கு-ரை.) மேகமறைத்து விடுதலினாலே சந்திரனுக் கியற்கையாயுள்ளநிலவு தடைபடுவதுபோன்று ஆணவமலமறைத்து விடுதலினாலே ஆன்மாவினுக் கியற்கையாயுள்ள நல்லறிவு தடைபட்டுச் சிவபெருமானைத் தரிசித்தற் கிடமில்லாமற் போயிற்றென்றார் 'பார்க்கிலேன்' என்றார்.

செந்தா மரைத்தாளைத் தினந்தினமும் போற்றாமல்
அந்தரமாய் நின்றங் கலைந்தேனான் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! சிவந்த தாமரை போன்ற திருவடியினை, நித்தியமும் தோத்தரியாமல் அனாதரவாயிருந்து உழன்றேன்.

(கு-ரை.) சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் சிவாலயத்துட் பிரவேசித்து அப்பெருமான் திருவடிகளைக் கண்களாரத் தரிசித்துத் தோத்தரியாதவர்கள் எச்சார்புமின்றி அலைவரென்பார் 'அலைந்தேன் நான்' என்றனர். 86

நீர்மேற் குமிழிபோல் நிலைபற்ற காயமிதைத்
தாரகமென் றெண்ணிநான் றட்டழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைகின்ற பொருளே! ஜலத்தின்மேலே தோன்றும் குமிழியினை யொத்த நிலையில்லாத தேகத்தினை ஆதாரமென்று நினைத்துத் தடுமாறிவிட்டேன்.

(கு-ரை.) நீரினிடத்தே குமிழியானது தோன்றி மறைவதுபோல இவ்வுடல் இவ்வுலகினில் அடிக்கடி அதிசீக்கிரத்திற் றோன்றி மறையும் நிலையினையுடைய தென்பதைச் சிறிதும் ஆலோசித்துப் பாராததால், சதமென வெண்ணி உடலிற் பற்றுவைத்தலினால் தடுமாறினேன் என்பார் 'தட்டழிந்தேன்' என்றனர். 87

நெஞ்ச முருகி நினைந்துனைத்தான் போற்றிநெடு
வஞ்சகத்தைப் போக்க வகையறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! மனங்கசிந்துருகி தேவரீரைத் தோத்தரித்து (எனக்குள்ள) வஞ்சகத்தினைப் போக்கிக்கொள்ளும் வகையை அறிந்துகொண்டேனில்லை.

(கு-ரை.) அன்புடனே மனமுருகிச் சிவபெருமானைத் தோத்தரித்து வருவார்கட்கு மனத்தின் கண்ணே பிரபஞ்ச சம்பந்தமாக நேரிடும் மயக்கம் வாராதென்பார் 'வகையறியேன்' என்றனர்.

எள்ளுக்கு ளெண்ணெய்போ லெங்கு நிறைந்திருந்த
துள்ள மறியா துருகினேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! எள்ளுக்குள்ளே எண்ணெய் வியாபித்திருப்பதுபோலச் சர்வவியாபகமாக நிறைந்துள்ள உண்மையினை மனத்தினிடத்தே தெரிந்து கொள்ளாது மயக்கமுற்றேன்.

(கு-ரை.) சிவபெருமான் சர்வவியாபகமாக இருந்துகொண்டிருக்குந் தன்மையினை விசாரித்துணராத தன்மையினாலே, அப்பெருமான் சம்பந்தமாகவிளையும் சந்தேகங்கட் கிடங்கொடுக்க மனம் வாடினேனென்பார் 'உருகினேன்' என்றனர். 89

மாயாப் பிரபஞ்ச மயக்கத்தி லேவிழுந்தே
ஓயாச் சனன மொழித்திலேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! காரிய ரூபமாயுள்ள உலகத்தின் கண்ணே மயங்கி நீங்காத பிறப்பினை நீக்கிக் கொண்டேனில்லை.

(கு-ரை.) பிரபஞ்சம் மாயாகாரியமாக விருத்தலின் இதனிடத்திற் பற்றுவைத்தல் கூடாதென்பதை யுணராது, அதனிடத்து மோகங்கொண்டிருந்ததினாலே பிறப்பினுக்கேதுவுண்டாயிற்றென்பார் 'ஒழித்திலேன்' என்றனர். 90

பூசை யுடன்புவன போகமெனும் போக்கியத்தால்
ஆசையுற்றே நானு மறிவழிந்தேன் பூரணமே.

(பொ-ரை.) எங்குநிறைகின்ற பொருளே! சிறுதெய்வப் பூசையினும், உலகத்தில் அனுபவிக்கப்படும் போகவஸ்துக்களினும் ஆசைவைத்து வாழ்ந்ததினாலே அடியேனு மறிவுகெட்டேன்.

(கு-ரை.) சிவபூசையல்லாத வேறு அற்பபூசைகளிலும், உலக போகமனுபவிப்பதிலும் அவாவைவைத்துக் காலத்தினைக் கழித்து வந்தேன் 'மறிவழிந்தேன்' என்றனர். 91

படைத்து மழித்திடுவாய் பார்க்கிற்பிரமா வெழுத்தைத்
தொடைத்துச் சிரஞ்சீவியாய்த் துலங்குவிப்பாய் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! உண்டாக்கியும் சங்கரிப்பதையும் ஆராயில் பிரமனாலே விதித்த எற்பாட்டினையும் நீக்கி நித்தியனாகவிருந்து பிரகாசிக்கும்படி செய்வாய்.

(கு-ரை.) சிருஷ்டியால் தொழிலினைத் தேவரீரே செய்வதல்லாமல் வேறு தேவர்கள் விதித்துள்ள ஆணையையு மாற்றிவைக்கும் சர்வசாமார்த்தியத்துடன் விளங்குந் தெய்வம் நீயேயென்பார் 'துலங்குவிப்பாய்' என்றனர்.

மந்திரமாய் சாத்திரமாய் மறைநான்காய் நீயிருந்த
தந்திரத்தை நானறியத் தருமோதான் பூரணமே.

(பொ-ரை.) மந்திரசொரூபியாகியும், சாஸ்திரத்தினால் பிரதிபாதிக்கப்படுபவனாகியும் வேதநான்காலும் கொண்டாடப்படுபவனாகியும், தேவரீர் எழுந்தருளியிருக்கும் தன்மையினை அடியேன் தெரிந்து கொள்ளத்தகுமோ.

(கு-ரை.) வேதங்களாலும் சாஸ்திரங்களாலும் கொண்டாடப்படுகிற தெய்வமாகத் தேவரீரிருப்பதுடன் அவற்றால் பஞ்ச பிரமமந்திரசொரூபி தேவரீரே எனக் கூறுவதும் ஆகிய உண்மையினைச் சிற்றறிவினையுடைய நான் தெரிந்துகொள்ளத் 'தருமோதான்' என்றனர்.

அல்லாய்ப் பகலா யனவரத காலமெனுஞ்
சொல்லாய்ப் பகுத்த தொடர்பறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கும் நிறைகின்ற பொருளே ! இரவாயும் பகலாயும் எல்லாக்காலமாயும், சொல்லாகியும் வகுத்துள்ள சம்பந்தினை யறிந்தேனில்லை.

(கு-ரை.) இவ்வுலகத்தினைக் காலபேதத்தாலும், சத்தரூபத்தாலும்அமைத்து வைத்துள்ள சம்பந்தா சம்பந்தத்தினைச் சாஸ்திரமூலமாக விசாரித்து அவற்றினுண்மை தெரிந்துகொண்டேனில்லை யென்பார் 'தொடர்பறியேன்' என்றனர். 94

நரகஞ் சுவர்க்கமென நண்ணு மிரண்டுண்டாயும்
அரகரா வென்ப தறிகிலேன் பூரணமே.

(பொ-ரை.) நரகமெனவும், சுவர்க்கமெனவும் பொருந்திய இரண்டு இடங்களேற்பட்டிருந்தும் சுவர்க்கத்தையடைந்து அரகரா எனச்சொல்லத் தேர்கின்றிலேன்.

(கு ரை.) சிவபெருமான் திருநாமங்களிலொன்றாகிய அரகர சப்தம் செய்பவர்க்கு மோட்சமும், சொல்லாதவர் கட்கு நரகமும் உண்டாமென்பதைத் தெரிந்திருந்தும் கன்மவசத்தால் அப்பெயரை உச்சரிக்கும் வகை தெரிந்திலேன் என்பார் 'அறிகிலேன்' என்றனர். 95

பாவபுண் ணியமென்னும் பகுப்பாய்ப் பகைத்தழுத்திங்
காவலைபுண் டாக்கிவைத்த வருளறியேன் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! பாவமெனவும் புண்ணியமெனவும் இருவகையாக உண்டாக்கி, சிருஷ்டித்தும், சங்கரித்தும், பிரபஞ்சமுகமாக ஆசையினை விளைவித்தும் வைத்த திருவருளினுண்மையை அறியேன்.

(கு - ரை.) ஆன்மாக்களின் பாவபுண்ணியவிபரங்களை அரியாமல் மாய்கையில் அவாவினை யுண்டாக்கி, அறிவுமயங்கச்செய்து வரும் திருவருள் விளையாட்டினைத்தேரேன் என்பார் 'அருளறியேன்' என்றனர். 96

சாந்தமென்றுங் கோபமென்றுஞ் சாதிபே தங்களென்றும்
பாந்தமென்றும் புத்தியென்றும் படைத்தனையே பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! பொறுமையெனவும், கோபமெனவும், பலவகையான சாதிகளெனவும், பந்தமெனவும், புத்தியெனவும் உண்டாக்கினை.

(கு-ரை.) பொருமை, கோபம், சாதி, பாசம், புத்தி முதலிய யாவும் ஆன்மாக்களினுடைய கன்மத்திற்குத் தக்கபடியேவிளையுமாயினும் அக்கன்மத்தினைக்கூட்டி முடிப்பவன் சிவபெருமானேயாகலின் 'படைத்தனையே' என்றனர். 97

பாச முடலாய்ப் பசுவதுவுந் தானுயிராய்
நேசமுட னீபொருளாய் நின்றனையே பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே ! உடல் பாசமாகவும் உயிர் பசுவாகவும், தேவரீர்பதியாகவும், அன்புடனே எழுந்தருளினை.

(கு ரை.) பாசம் சடமாகலினாலும், பசு சுதந்திர வீரனாகலினாலும், இரண்டினையும் கன்மத்திற்குத் தக்கபடிகூட்டி முடிப்பித்துக் கொண்டு இருப்பவன் பதியாகலின், திரிபதார்த்தமாகவும் நீயே யிருந்தனை யென்பார் 'நீ பொருளாய் நின்றனை' என்றனர். 98

எதிலடி யாரிரங்கி யிகத்தில்வந் துன்றன்
பாதமதில் தாழப் பரிந்தருள்வாய் பூரணமே.

(பொ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! குற்றமில்லாத சிவனடியார்கள் மனமுருகி இம்மையில் வந்து தேவரீர் திருவடியில் வணங்க அவர்கட்கு விருப்பத்துடன் திருவருள்புரிந்தருள்வாய்.

(கு-ரை.) தேவரீருடைய திருவடியில் அன்புமயமாக மனமுருகி வணங்கும் சிவனடியார்கட்கு வேண்டியவற்றைத் திருவருள் புரிவையென்பார் 'பரிந்தருள்வாய்' என்றனர்.

நானேநீ நீயேநா னுமிரண்டு மொன்றானால்
தேனின் ருசியதுபோற் றெவிட்டாய்நீ பூரணமே.

(போ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! ஆன்மா (சிவமாந் தன்மையடைய)நானே நீயாகவும், நீயே நானாகவும் இருவருமொரு தன்மையினை யடைந்தால் அவ்வமயம் தேனினுடைய சுவையினைப்போல இனித்திருப்பாய்.

(கு-ரை.) ஆன்மாவும் பரமான்மாவும் இரண்டறக்கலந்து அத்துவிதமாக விருந்த அவசரத்துவிளையும் சிவானந்தம், ஆன்மாவிற்குத்தேனின்சுவையை யொக்குமென்பார் 'தெவிட்டாய்' என்றனர். ஈண்டு முத்தியனுபவத்தில் தேனின் சுவையை ஒருவித உவமையாகக் கூறினமையின் ஏகான்மவாதத்தினை மறுத்தவாறாயிற்று. என்னை? அனுபவம் இரண்டுபதார்த்தத்தினுக்கேயன்றி ஒன்றினுக்கின்மையின். 100

முடிவிலொரு சூனியத்தை முடித்துநின்று பாராமல்
அடியிலொரு சூனியத்தி லலைந்தேனே பூரணமே.

(போ-ரை.) எங்கு நிறைகின்ற பொருளே! தத்துவங்களையெல்லாங்கடந்த முடிவில் சிதாகாய சொரூபமாக விளங்குகிற சூனியத்தினைத் தெரிந்திருந்து தரிசியாமல், ஆகாயத்தில் ஒன்றுமில்லையென்று என்னறியாமையினாலே மாயையின் பாற்பட்டேன்.

(கு-ரை.) ஈண்டு சூனியமென்பது விளங்காமை பொருட்டாம் தற்போதத்திற்கு விளங்காது சூனியமாக விருக்கிற சிதாகாயசின்மய வெளியினை அருட்போதத்தைக்கொண்டு தரிசிக்கமுயலாமல், ஆரம்பத்திலேயே தற்போதங்கொண்டு யாவும் சூனியமென என்னறியாமையால் 'அலைந்தேனே' என்றனர்.. 101

பூரணமாலைதனைப் புத்தியுட ளோதினர்க்குத்
தாரணியில் ஞானந் தழைப்பிப்பாய் பூரணமே.

(பொ-ரை) பூரணமாலையென்னும் இப்பிரபந்தத்தினை அன்புடனே படித்தவர்க்கு இவ்வுலகில் ஞானத்தினை அருள் செய்வாய்.

(கு-ரை.) ஆன்மாக்களின் பொருட்டு மனமிரங்கிக் கருணைகூர்ந்து நித்யாநித்ய உண்மையினைப் பூரணமாலையினில் விளக்கிக் காட்டினமையின் அந்நூல் சிவனடியார்கட்குப்பிரயோசனமாமாறு சிவபெருமானை ஆசிரியர் வணங்கிக் கேட்டுக் கொண்டவிதமாக இத்திருச் செய்யுளை 'தழைப்பிப்பாய்' என்றனர். 102

பூரணமாலை முற்றிற்று.

---

பட்டினத்துப் பிள்ளையார்

## நெஞ்சொடுமகிழ்தல்.

அன்றுமுத லின்றளவு மாக்கையொடு சூட்சியுமாய்
நின்ற நிலையறிய நேசமுற்றாய் நெஞ்சமே.

(பொ-ரை.) மனமே! பிறந்த நாள் முதல் இன்றையதினம் வரையில் தேகத்துடனே தந்திரமாக விருந்த நிலையினை யறிந்து கொள்ள என்பால் விருப்பம் வைத்தனை.

(கு-ரை.) உடல் வந்ததற்குக்காரணமும், அவ்வுடலுடன் இன்றையதினம் வரையில் உயிர் சம்பந்தப்பட்டு நடத்திக் கொண்டு வருகிற தன்மையையும், இத்தகையதென விசாரித்துத் தெரிந்து கொள்ளற்குக் காரணமாயிருந்தனை யாதலால், 'நேசமுற்றாய்' என்றனர். 1

அங்கங் குணர்வா யறிவாகி யேநிரம்பி
எங்கெங்கு மானதிலே யேகரித்தாய் நெஞ்சமே.

(பொ-ரை.) மனமே! அவ்வவ்விடங்களில் அறிதற்கேதுவான அறிவாகியிருந்து, எவ்விடத்துமான எவற்றிலும் கலந்தனை.

(கு-ரை.) மனமானது எந்தெந்த பதார்த்தங்களில் தாவுகின்றதோ அவ்வப்பதார்த்தங்களின் மயமேயாகி அவற்றுள் கலந்து வேற்றுமையின்றி யிருந்து கொண்டிருக்கின்றன வாதலால், 'ஏகரித்தாய்' என்றனர். 2

அலையாத பேரின்ப வானந்த வெள்ளத்தில்
நிலையா யுருவிறந்து நின்றனையே நெஞ்சமே.

(பொ-ரை.) மனமே! சலனமில்லாத பேரானந்தக் கடலில் சாசுவதமாகத் தங்கித் தலையெடா திருந்தனை.

(கு-ரை.) சிவானந்தமாகிய சமுத்திரத்திலழுந்தித் தலையெடாதபடி அவ்வானந்தமே தனக்குரிய செயலாய்த் தற்போதமுளை வின்றி யிருந்தனை யென்பார் 'உருவிறந்து' என்றனர். ஈண்டு உருவென்றது வேறுசெயல். 3

பாராமற் பதையாமற் பருகாமல் யாதொன்றும்
ஓரா துணர்வின்னே யொன்றினையே நெஞ்சமே.

(போ - ரை.) மனமே! நோக்காமலும், அவசரப்படாமலும், உண்ணாமலும், எதனையும் ஆராயாமலும், சிவபெருமானுடனே சேர்ந்தனையே.

(கு-ரை.) பிரபஞ்சமுகமாக விருந்துகொண்டு யாதொரு சீவச் செயலைச் செய்யாது சிவமயமாக விருந்தனை யென்பார் 'ஒன்றினையே' என்றனர். 4

களவிறந்து கொலையிறந்து காண்பனவுங் காட்சியும்போ
யளவிறந்து நின்றதிலே யன்புற்றாய் நெஞ்சமே.

(போ-ரை.) மனமே! பிறர்பொருளை அபகரிப்பது மின்றி, கொலைத்தொழிலற்று, பகையற்று ஞானந்தோன்றி எல்லையற்ற பொருளினிடத்தே விருப்பம் வைத்தனை.

(கு-ரை.) உலகிலேபற்று உண்டாவதற் கேதுவாகிய செயலை யொழித்துச் சிவபெருமானை யடைதலிலே அவாவுற்றனை என்பார் 'அன்புற்றாய்' என்றனர். 5

பேச்சிறந்து சுட்டிறந்து பின்னிறந்து முன்னிறந்து
நீச்சிறந்து நின்றதிலே நேசமுற்றாய் நெஞ்சமே.

(போ-ரை.) மனமே! மவுனத்திற்குரியதாகிய, ஏகதேசநோக்கிற்கரியதாகி, எதிர்காலம் இறந்தகாலங் குறித்தற் கில்லாமல், அசைவற்றவொரு பொருளினிடத்தே விருப்பம் வைத்தனை.

(கு-ரை.) எவ்வகையான பிரபஞ்ச செயல்கட்கும் அப்பாற்பட்டுவிளங்கும் சிவபெருமானிடம் அவாகொண்டனை யென்பார் 'நேசமுற்றாய்' என்றனர். 6

விண்ணிறந்து மண்ணிறந்து வெளியிறந்து வொளியிறந்து
எண்ணிறந்து நின்றதிலே யேகரித்தாய் நெஞ்சமே.

(போ-ரை.) மனமே! ஆகாயம்கடந்தும், பூமிகடந்தும் வெளிகடந்தும், பிரகாசம்கடந்தும், அளவிற்கெட்டாத வஸ்துவில் வொன்றாகக் கலந்தனை.

(கு-ரை.) பௌதிக சம்பந்தமாயுள்ள பொருள்களனைத்தினையும் கடந்து விளங்கும் வியாபக வஸ்துவாகிய சிவபெருமானை விரண்டறக் கலந்திருந்தனை யாதலால் 'ஏகரித்தாய்' என்றனர். 7

பார்த்தவிட மெங்கும் பரமெனவே யுட்புறம்புங்
கோர்த்தபடி யுண்மையெனக் கொண்டனையே நெஞ்சமே.

(போ-ரை.) மனமே! நோக்கிய விடங்கள்தோறும் சிவமயமேயாகி அகமும்புறமு மொன்றாகக் கலந்திருத்தல் சத்தியமெனத் தெரிந்துகொண்டனை.

(கு-ரை.) சிவத்தியானத் தடிப்பேறி உலகமனைத்தையும் சிவமயமாகக்கண்டு உள்ளும்புறம்பும் ஒரேதன்மையாகவுள்ள நிலையினைத் தெரிந்துகொண்டனை யென்பார் உண்மையெனக் 'கொண்டனையே' என்றனர். 8

ஊரிறந்து பேரிறந்து வொளியிறந்து வெளியிறந்து
சீரிறந்து நின்றநிலை சேர்ந்தனையே நெஞ்சமே.

(பொ-ரை.) மனமே! தேசமொழிந்து, பூதப்பிரகாசமொழிந்து, பூதாகாயமொழிந்து, பிரபஞ்சச் சிறப்பொழிந்திருந்த நிலையினிலே கலந்தனையே.

(கு-ரை.) தனக்கு ஊர்பேர் வொன்றுமில்லாது எவற்றினும் கடந்து விளங்கும் சிவபெருமான் திருவருளில் இரண்டறவிளங்கினையே என்பார் 'கலந்தனையே' யென்றனர். 9

ஆண்பெண் ணலிபென் றழைக்கவரி தாய்நிறைந்து
காண்பவரி தாயவிடங் கண்ணுற்றாய் நெஞ்சமே.

(பொ-ரை.) மனமே! அவன், அவள், அதுவென அழைக்கத் தகுந்த வேற்றுமைப்பொருட்டன்மைக்கு அருமையாயிருந்துகாண்டற்கரிய விடத்தினைத் தரிசித்தனை.

(பொ-ரை.) இன்னதன்மைய னென்றழைத்தற்கரிய சிவபெருமான் எழுந்தருளியிருக்குமோர் இடத்தினைத் தெரிந்துகொண்டனை யென்பார் 'கண்ணுற்றாய்' என்றனர். 10

ஆங்கார மச்ச மகற்றி யறிவினொடு
தூங்காமற் றூங்கிச் சுகம்பெற்றாய் நெஞ்சமே.

(பொ-ரை.) மனமே! அகங்காரம், பயம் நீங்கி ஞானமயமாகி தூங்காமலே தூக்கங்கொண்டு இன்பமுற்றாய்.

(கு-ரை.) சிவானந்தவின்பம் அடைதற்கிடையூறாயுள்ள அகங்காரமுதலியவை யொழித்துத் தற்போத மொன்னிட்டுத் தூங்காமல்

அருட்போதமுன்னிட்டுத் தூங்கிச் சிவானந்த மடைந்தனை யென்பார் 'சுகமுற்றாய்' என்றனர். (11)

ஆதியாய் நின்ற வகண்டபரி பூரணத்தைச்
சாதியா நின்றவிடஞ் சார்வுற்றாய் நெஞ்சமே.

(போ - ரை.) மனமே! எல்லாவகையான பொருள்களுக்கும் தலைமையாகவுள்ள வியாபகமான பரிபூரணவஸ்துவைத் தெரிவிக்கத்தகுந்த இடத்தினைச் சேர்ந்தனை.

(கு - ரை.) சிவபெருமானைத் தெரிந்து கொள்ளுதற் கேதுவாகிய திருவருட்பிறகாசமாகிய இடத்தினைக் கலந்தாயென்பார் 'சார்வுற்றாய்' என்றனர். (12)

விருப்புவெறுப் பில்லாத வெட்டவெ ளியதனில்
இருப்பே சுகமென் றிருந்தனையே நெஞ்சமே.

(போ-ரை.) மனமே! விரும்புதற்கும் வெறுத்தற்கும் எதுவில்லாத சிதாகாய வெளியிலேயுள்ள வாழ்வே சுகமெனக் கொண்டனை.

(கு - ரை.) விருப்பும் வெறுப்புமற்ற சிதம்பரவெளியே தனக்கிடமாகக்கிக் கொள்ளுதல் இன்பமென்று கொண்டனை யென்பார் 'சுகமென்றிருந்தனையே' என்றனர். (13)

ஆறுமுறாப் பேரண்டத் தப்புறத்து மிப்புறத்தும்
நீறுமுப்பு மென்ன நிலைபெற்றாய் நெஞ்சமே.

(போ - ரை.) மனமே! எவரு மடைதற்குக்கூடாத அண்டத்தினுள்ளும் புறம்பும் நீரும் உப்பும்போலக் கலந்த நிலையுற்றனை.

(சூ-ரை.) நீரினிடத்தே உப்புக் கலந்தபோது உப்பின் தடிப்பு நீங்கியதுபோல சிவபெருமான் திருவருள் வியாபகத்தில் முடிவு தோன்று திருந்தனை யென்பார் 'நிலைபெற்றாய்' என்றனர். இது ஏகதேச உவமானம். (14)

உடலாகவேயிருந்து முணரவரி யானோடு
கடனீரு மாறும்போற் கலந்தனையே நெஞ்சமே.

(பொ-ரை.) மனமே! என்றும் கலந்திருந்தும் அறிதற்கருமையாக விருக்கின்ற பெருமானுடன் சமுத்திரம் நதியும்போலக் கலந்தனையே.

(சூ-ரை.) ஆன்மாவுட னிருந்து கொண்டிருக்கும் ஆணவமலத்தால் வெளிப்படாதிருந்த சிவபெருமானுடன் கடல்நீரும் ஆற்று நீருமொன்றானாற் போலச் சேர்ந்தனை யென்பார் 'கலந்தனையே' என்றனர். இதுவும் ஒருபுடை யொற்றுவமையாலின் ஏகதேசவுவமை. (15)

நெடியகத் தைப்போக்கி நின்ற சழக்கறுத்துப்
படிகத்துக் கும்பம்போற் பற்றினையே நெஞ்சமே.

(பொ-ரை.) மனமே! நீளப்பிதற்றுதலும், நிலையுற்ற குற்றங்களும் நீக்கிப் படிகப்பாண்டம் போலக் கிரகித்தனை.

(சூ-ரை.) படிகத்தாற்செய்துள்ள வொருகுடமானது தனக்கு முன்னிட்ட நிறங்களைக் கிரகித்துத் தனக்கெனவொரு நிறமின்றி யிருத்தல் போலச் சார்ந்த அதன்வண்ணமாய் நீயும்நின்றனையென்பார் 'பற்றினையே' என்றனர். (16)

மேலாகி யெங்கும் விளங்கும் பரம்பொருளிற்
பாலூறு மென்சுவைபோற் பற்றினையே நெஞ்சமே.

(போ-ரை.) எல்லாவற்றினுக்கும் சிறந்து பிரகாசிக்கின்ற பெருமானிடத்துப் பாலும் அதன்சுவையும்போல விருந்தனை.

(கு-ரை.) பாலினின்று நீங்காத சுவையினைப்போலச் சிவபெருமானிடத்து விளங்கினை யென்பார் 'பற்றினையே' என்றார். ஈண்டு கூறிய உவமையும் ஏகதேசமாகலின் குணகுணிபேதவுவமை கொள்ளாது ஒன்றிலொன்று விளங்கும் தன்மைமாத்திரங் கொள்ளுக.

நீரோடுதண் ணலிவிண்டு நீரான வாறேபோல்
ஊரோடு பேரில்லானோ டொன்றினையே நெஞ்சமே.

(போ-ரை.) மனமே! நீருடனே குளிர்ச்சிபொருந்திய ஆலாங்கட்டி பழையபடி நீரான தன்மைபோல ஊரும்பேரு மற்ற சிவபெருமானுடன் பொருந்தினை.

(கு-ரை.) நீரும் ஆலாங்கட்டியும் ஒருபுடையுவமையே யாகலின் தடிப்பு நீங்குந்தன்மை யவ்வளவினுக்கே கொள்ளுகயென்பார் 'ஒன்றினையே' என்றனர். 18

இப்பிறப்பைப் பாழ்படுத்தி யிருந்தபடி யேயிருக்கச்
செப்பவரி தாயவிடஞ் சேர்ந்தனையே நெஞ்சமே.

(போ-ரை.) மனமே! எடுத்த சென்மத்தினைப் பாழாக்கி மவுன நிலையிலிருந்திடச் சொல்லற்கரிய இடத்தினை யடைந்தனை.

(கு-ரை.) மறுசென்மமுண்டாதற் கேதுவாகிய தத்துவசேஷ்டைகளை இச்சென்மத்திலேயே யொழித்து மவுனநிலை யடைந்தனையாகலின் திருவருளினை யாதாரமாகப்பெற்றனை யென்பார் 'சேர்ந்தனையே' என்றனர். 19

மேலாம் பதங்களெல்லாம் விட்டுவிட் டாராய்ந்து
நாலாம் பதத்தி லடைந்தனையே நெஞ்சமே.

(பொ-ரை.) மனமே! மேம்பட்டுள்ள மும்மூர்த்திகளின் பதங்களையெல்லாம் விசாரித்து நீங்கி, உண்மை தெளிந்து நாலாவது பதவியினை நாடிச்சேர்ந்தனை.

(கு-ரை.) நாலாம்பதமாவது பிரமனுலகு, விண்டுலகு, உருத்திரனுலகு மூன்றையுங்கடந்த துரியமூர்த்தியாகியசிவபெருமானது சிதாகாயவுலகத்தை 'அடைந்தனையே' என்றனர். 20

கடங்கடங்க டோறுங் கதிரவ னூடாடி
யடங்குமிடந் தானறிந் தன்புற்றாய் நெஞ்சமே.

(பொ-ரை.) மனமே! ஒவ்வொரு பாண்டத்திலும் சூரியன் பிரதிபிம்பித்திருந்து பாண்டம் உடைந்தவழி பிரதிபிம்பம் சூரியனிற் சாரும் என்னும் உண்மைதெரிந்து விருப்பமுற்றனை.

(கு-ரை.) சூரியன் பாண்டங்கள்தோறும் தோன்றிப் பாண்டமுடைந்தவழி பிரதிவிம்பம் சூரியனைச் சாருமாறுபோல மாயையானது உடல்தோறும் காரியப்பட்டிருந்து உடல் நீங்கியகாலத்துக் காரியமாயை காரணமாயையி லொடுங்குமென்பதால் 'அன்புற்றாய்' என்றனர். இப்பிரதி பிம்பத்தினைப் பிரமத்தின்மேலேற்றிக் கூறுவர் ஏகான்மவாதிகள் பிரமத்திற் கன்னியமானவெல்லாம் சூனியமெனுமவரைப் பிரமம் பிரதிபிம்பிக்க வேறுவஸ்து எது எனக்கேட்டு அவரைமறுக்க. 21

கற்றவனுப் கேட்டவனுப்க் காணுனுப்க் காண்பவனுப்
உற்றவனுப் நின்றதிலே யொன்றுபட்டாய் நெஞ்சமே.

(பொ-ரை.) மனமே! எல்லாம் கற்றவனாகவும், எல்லார் பிரார்த்தனையும் கேட்டவனாகவும், ஒருவருக்கும் காணாதவனாகவும் 'அடி

யார்கட்கு) காண்பவனாகவும் எல்லாரிடத்தும் கலந்தவனாகவுமுள்ள அவனிடத்தே கலந்தனை.

(கு-ரை.) ஆன்மாக்கள் சிவபெருமானை யறியாதவர்களாக விருக்கினும் சிவபெருமான் தன் வியாபகத்து ளடங்கிய ஆன்மாக்களின் செயலனைத்தையும் தெரிந்துகொள்ளுவ னென்பதால். 'ஒன்றுபட்டாய்' என்றனர். 22

நாலு வகைக்கரண நல்குபுல னைந்துமொன்றாய்ச்
சீலமுற்று நின்றதிலே சேர்ந்தனையே நெஞ்சமே.

(பொ-ரை.) மனமே! நான்கு வகைப்பட்ட அந்தக்கரணங்களும், (விஷயங்களைக்) கொடுக்கும் ஐம்புலன்களும் ஒற்றுமைப் பட்டுச் சுத்தமான அவசரத்திலே கலந்தனை.

(கு-ரை.) கரணங்களும், புலன்களும் பிரபஞ்சமுகமான சேஷ்டைகளினின்று நீங்கி யந்தர்முகமாக நடக்கும் அவசரத்தே கலந்தனை யென்பார் 'சேர்ந்தனையே' என்றனர். 23

விட்டிடமும் தொட்டிடமும் விண்ணிடமு மண்ணிடமுங்
கட்டுமொரு தன்மையெனக் கண்ணுற்றாய் நெஞ்சமே.

(பொ-ரை.) மனமே! நீங்கிய இடமும், அடைந்த இடமும், ஆகாயமும், பூமியும் ஒரேதன்மையாக பார்த்தனை.

(கு-ரை) விட்டகுறை சரியை கிரியையில் பூர்த்தியடையாமலும், தொட்டகுறை யோகம்ஞானமென்பதில்முடிவடையாமலும்,தேகம் நீங்கி இதன் புண்ணியத்துக்குத் தக்கபடி மேலுலக இன்பத்தை யனுபவித்து திரும்பபூமியில்பிறந்து ஆசானருளால்ஞானம் முடிவடைந்ததை 'கண்ணுற்றாய்' என்றனர்.

எந்தெந்த நாளு மிருந்தபடி யேயிருக்க
அந்தச் சுகாதீத மாக்கினையே நெஞ்சமே.

(பொ-ரை.) மனமே! எக்காலமும் ஒரு நிலையிலேயே தங்கி அந்த இன்பமயமாகி இருக்கச் செய்தனையே.

(கு-ரை.) எக்காலத்தும் ஒரேதன்மையான மவுன நிலையுடன் கூடிச் சிவானந்த மனுபவிக்கச் செய்தனை என்பார் 'ஆக்கினையே' என்றனர்.

வாக்கிறந்து நின்ற மனோகோசரந்தனிலே
தாக்கறவே நின்றதிலே தலைசெய்தாய் நெஞ்சமே.

(பொ-ரை.) மனமே! சொல்லற்கடங்காத மனோதீத நிலையிலே யாதொன்றிலும் மனப்பற்றில்லாமல் தலைமை வாய்ந்தாய்.

(கு-ரை.) சொல்லாலெடுத்து விசாரித்தற்கும், மனத்தினாலே நினைத்தற்கும் அரிய சுகாதீத நிலையிலே தனித்து நின்றனை என்பார் 'தலைசெய்தாய்' என்றனர். 26

எத்தேசமுநிறைந்தே யெக்கால முஞ்சிறந்து
சித்தாய சித்தினிடஞ் சேர்ந்தனையே நெஞ்சமே.

(பொ-ரை.) மனமே! எல்லாத் தேயங்களினும் பூரணமாகி எப்போதும் சிறப்புற்று விளங்கும் அறிவுருபமாயுள்ள சிவத்திலடைந்தனையே.

(கு-ரை.) எல்லாவுலகங்களிலும் சர்வ வியாபகமாய் எல்லாவற்றினுமேன்மையடைந்து சூக்குமசித்தி ரூபமாகவிளங்கும் அறிவுமயமான பெருமானிடம் கலந்தனையென்பார் 'சேர்ந்தனையே' என்றனர். 27

தாழாதே நீளாதே தன்மய மாய்நிறைந்து
வாழாதே வாழ மருவினையே நெஞ்சமே.

(போ-ரை.) மனமே! தாழ்வுபடாமலும், உயர்வடையாமலும் ஒரே தன்மையினையுற்றுப் பிரபஞ்சமுகமாக வாழாமல் திருவருளினை முன்னிட்டு வாழக் கலந்தனை.

(கு-ரை.) திருவருள் வியாபகத்திற் றிளைத்து என்றும் ஒருபடித்தாயிருக்கும் தன்மையினையடைந்தாயென்பார் 'மருவினையே' என்றனர். 28

உள்ளும் புறம்பு முவட்டாத வானந்தக்
கள்ளருந்தி நின்றதிலே கண்ணுற்றாய் நெஞ்சமே.

(போ-ரை.) மனமே! அகத்திலும் புறத்திலும் தெவிட்டாத சிவானந்தத் தேனருந்திய நிலையிலேயே இலட்சியம் வைத்தனை.

(கு-ரை.) எக்காலத்தும், எவ்வகையினும் விருப்பு வெறுப்புண்டாகாத சிவானந்த அமிர்தத்தையுண்ட தன்மையை 'கண்ணுற்றாய்' என்றனர். 29

வாதனைபோய் நிட்டையும்போய் மாமௌன ராச்சியம்போ
பேதமற நின்றவிடம் பெற்றனையே நெஞ்சமே. [ய்

(போ-ரை.) மனமே! பிரபஞ்சவாசனை யொழிந்து, யோகங்கலந்து, மவுன நிலையினின்று நீங்கி அபேதமாகவுள்ள திருவருணிலையை யடைந்தனை.

(கு-ரை.) திருவருணிலையை யடைதற்குச் சாதனமாகயிதுகாறு மிருந்தவை யெல்லாம் தாமே நெகிழ்ந்துவிடச்சாத்தியமுற்றாயென்பார் 'பெற்றனையே' என்றனர். 30

இரதம் பிரிந்துகலந் தேகமாம் வாறேபோல்
விரகந் தவிர்த்தனல்பால் மேவினையே நெஞ்சமே.

(பொ-ரை.) மனமே! பாதரசம் பிரிந்தகாலத்து உடனேகலந்து விடுமாறுபோல ஆசைநீங்கி ஞானக்கினியினிடத்துப் பொருந்தினையே.

(கு-ரை.) ஒவ்வொரு சமயம் பிரபஞ்ச விரகம் தாக்கிய காலத்து வெளிமுகப்படினும் அக்கணமே பழையபடி திருவருளிற் கலந்து விடுமென்பார் 'மேவினையே' என்றனர். ஈண்டு அனல் என்றது அக்கினி சொரூபமான சிவம். 31

சோதியான் சூழ்பனிநீர் சூறைகொளு மாறேபோல்
நீதிகுரு வின்றிருத்தாள் நீபெற்றாய் நெஞ்சமே.

(பொ-ரை.) மனமே! சூரியனானவன் தன் பிரகாசத்தால் தன்னைச் சூழ்ந்துள்ள 'பனிநீரினை நீக்கி' விடுமாறுபோன்று நீதியுடன் கூடிய ஆசாரிய மூர்த்தியின் அழகிய சரணங்களை நீ யடைந்து விட்டனை.

(கு-ரை.) சூரியகிரணம் பனியை யொழித்தாற்போல பிரபஞ்ச வியாபாரத்தினை யொழிக்கஆசாரியன் திருவருள் நோக்கம் பெற்று அவனடியினையடைந்தனை யென்பார் 'நீ பெற்றாய்' என்றனர். 32

நெஞ்சோடு மகிழ்தல் முற்றிற்று.

---

பட்டினத்துப் பிள்ளையார் பாடற்றிரட்டினுக்கு, அறுபான் மும்மை நாயன்மாருள் ஒருவராகிய வாயிலார் நாயனார் பரம்பரையில் வந்தவரும் சுத்தாத்வித சித்தாந்த வைதிகசைவ பிரவர்த்தகாசாரியரும் சென்னை மெய்கண்ட சந்தான சபை அக்கிராசனாதிபதியுமாகிய, சித்தாந்தசரபம், அஷ்டாவதானம் பூவை கலியாணசுந்தரர் இயற்றியது.

## ஞானார்த்த தீபவுரை முற்றியது.

---

# பத்திரகிரியார்

மெய்ஞ்ஞானப் புலம்பல்-மூலமும்,

ஞானார்த்த தீபவுரையும்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## பட்டினத்துச்சுவாமிகள் சீடராகிய

# பத்திரகிரியார் சரித்திரச்சுருக்கம்.

தவராஜசிங்கமாகிய திருவெண்காட்டடிகளென்னும் பட்டினத்துச்சுவாமிகள் சர்வசங்கப் பரித்தியாகமுற்றுக் காவிரிப்பூம்பட்டினத்தினின்றும் வெளியேறிச் சிவத்தலயாத்திரை செய்துவருகையில், வடதேசமாகிய பத்திரகிரி நகர்ப்புறத்திலுள்ள ஒருவிநாயகர் ஆலயத்தினையடைந்து சிவஞானநிஷ்டை கூடியிருக்குஞ் சமயத்தில் கள்வர்சிலர் அவ்விநாயகரைபிரார்த்திக்கொண்டு பத்திரகிரியரசன் மாளிகையிற் பிரவேசித்து வெகுதிரவியங்களைக் கொள்ளையடித்துக்கொண்டுபோகும்போது வழியில் தாங்கள் பிரார்த்தித்துக்கொண்ட விநாயகருக்குப் மிகவும் மேன்மையான ஓரிரத்தினமாலையை இருட்டில் அவ்விநாயகர் கோவிலில் சிவயோகநிஷ்டையிலிருந்தபட்டினத்தடிகளை விநாயகரென்றெண்ணி அவர் கழுத்தில் யணிந்துவிட்டுப் போயினர்; உதயத்தில் களவுபோனதையறிந்து கள்வரைத்தேடிக்கொண்டு புறப்பட்ட அரண்மனைக் காவலர்கள் நகர்ப்புறத்து வழியாகசெல்லும்போது பட்டினத்தடிகள் கழுத்தில் ஆபரணமிருக்கக் கண்டு இவரும் கள்வரைச்சேர்ந்தவரென பிடித்துக்கொண்டுபோய் அரசன் முன்னிலையில் விடுக்கவும் அரசன் வினவுகட்கெல்லாம் சிவ! சிவ! என்று சொல்லிக்கொண்டிருந்த சுவாமிகளைப்பற்றி யொன்றுந் தோன்றாது, அமைச்சனை நோக்கி நீ உன்னிஷ்டப்படி ஆக்கினை தருகவென, அவ்வமைச்சன் கழுவேற்ற நியமித்தனன். அங்ஙனமேகாவலர்கள் சுவாமிகளை யழைத்துக்கொண்டுபோய் கழுமரத்தின் முன்னிறுத்த சுவாமிகள் புன்னகைசெய்து "என்செயலாவதியாதொன்றுமில்லை யினித்தெய்வமே" என்னுந் திருச்செய்யுளைப்

யாடக் கழுமரம் எரிந்துவிட்டது! அதுகண்ட கொலையாளிகள் அரசனுக்கு அறிவிக்க அரசன் திடுக்கிட்டு ஓடிவந்து சுவாமிகள் திருவடியில் விழுந்து நமஸ்கரிக்க, அவ்வரசனது மனப்பக்குவத் தினை யுணர்ந்து தமது திருக்கண்களால் தீட்சிக்க உடனே அரசன் இராஜகோலத்தினை நீக்கி உடன் தொடரும் அரசனைப்பார்த்து நீ "திருவிடை மருதூரினுக்குச்செல்வாய்" எனக் கட்டளையிட்டு தாம் அநேகமான சிவத்தலங்களையடைந்து சிவதரிசனஞ்செய்து கொண்டும் மீண்டு திருவிடைமருதூரில் கீழைக்கோபுரவாயிலில் வீற்றிருந்தருளினர். பத்திரகிரியார் ஆசாரியன்வரவையறிந்து சென்று வணங்கி அவர் ஆணையை யேற்று அநேகமான சிவத்தலங்களைத் தரிசனஞ்செய்துகொண்டே திருவிடை மருதூரையடைந்து குருவைத் தரிசித்துக்கொண்டு அவர் கட்டளைப்படி மேலைக்கோபுர வாயிலில் இருந்து கொண்டிருந்து, தினம் பிச்சையேற்றுவந்து குருவுக்கு நிவேதனம்செய்து மீதிச் சேடத்தையுண்டு சிவநிஷ்டாபரராக விருந்தனர். இங்ஙனமாக, பத்திரகிரியாரிடம் ஒருபெட்டைநாய்க் குட்டிவந்து வாலைக்குழைத்துத் தன் பசிநோயைக்குறிப்பித்து நிற்க, அதனையறிந்து தனது சேடப்பிரசாதமளிக்கப் பசியாறி, அவருடன்கூடவே யிருந்துவிட்டது. ஒருநாள் மருதவாணர் ஒருயாசகனைப்போல வேடங்கொண்டு பட்டினத்தாரிடஞ் சென்று அதிக பசியுள்ளவர் போல நடிக்க, பட்டினத்தடிகள் "யான் கோவணந் தாங்குவதே பாரமாகவுடையேன் மேற்கு கோபுரவாயிலிலொரு சமுசாரி யிருக்கின்றான்" அவனிட மேகினால் பசியாற்றுவனென, இதுகேட்டு மருதவாணர் மேலைக்கோபுர வாயிலையடைந்து, பட்டினத்துச்சுவாமிகள் புகன்றதை யுரைக்கக் கேட்ட பத்திரகிரியார் இவ்வோடும், நாய்க்குட்டியுமோ என்னைச் சமுசாரியாக்கியது எனப் பாத்திரத்தை யெடுத்தெறிய, அது நாயின்சிரத்திற்பட அது இறந்தது. மருதவாணர் மறைந்தனர். அந்நாயானது காசிராஜாவின் மகளாகப்பிறந்து வளர்ந்து பக்குவமடையத் தந்தையறிந்து புரோகிதரையழைத்துத் தனது புத்திரிக்குத் தக்க நாயகன் நியமிக்கவேண்டுமென ஆலோசிக்கையில் இது

தெரிந்த பெண் பிதாவைநோக்கி, ஐயா! யாவனொருவனுக் குரியவ ளல்லள்.'திருவிடைமருதூரில் மேலைக்கோபுரவாயிலில் எழுந்தருளி யிருக்கும் எனது குருநாதரிடம் ஒப்புவிப்பீர்' என அரசனதிசயி த்து அவ்வுண்மை விசாரித்தறிந்து புத்திரியைப் பத்திரகிரியார் முன் கொணர்ந்துவிட, அவர் சிவநிஷ்டையிலிருந்து விழித்து நோக்க, அப்பெண் "முன்ஜென்மத்தில் தன்னிடம்வளர்ந்த பெட் டைநாயென்று அறிந்து புனித சரீரத்துடன் மீண்டும் திருவடியை நாடிவந்தது" என யாவும் திருவுளத்திலறிந்த பத்திரகிரியார் எழு ந்து அப்பெண்ணின் கரத்தினைப் பற்றிச்சென்று தனது ஆசிரியர் முன்னேவிட்டு அடியேன் உச்சிட்டமுண்டு வளர்ந்த நாய்க்கு மீண் டும் இப்பிறவிநோய் வரலாமோவெனச் சுவாமிகள் "அவன் செய லன்றி யாவதொன்றுமில்லை" எனத் திருவருணோக்கத்தை நாட்ட அப்போது ஒரு அருட்பெருஞ்சோதிதோன்றி அதனில்அப்பெண் ணுடன்பத்திரகிரியாரும் மறைந்தருளினர். சுபம்! சுபம்!! சுபம்!!!

---

இந்நூலுரையாசிரியரியற்றிய

## பத்திரகிரியார் திருநட்சத்திர வெண்பா.

ஓங்குதிரு வெண்காட் டையரடிகள் தன்னருளைப்
பாங்குபெற வேபெற்ற பத்ரகிரி—பாங்கொளியாய்ச்
சித்திரை மாமகத்திற் சேர்ந்தனனே மாமருதூர்க்
கத்த னருளிற் கலந்து.

பத்திரகிரியார் பதாம்புயம் வாழ்க.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# பத்திரகிரியார்
# மெய்ஞ்ஞானப் புலம்பலும்
## ஞானார்த்த தீபவுரையும்.

### விநாயகர் வணக்கம்.

முத்திதரும் ஞான மொழியாம் புலம்பல்சொல்ல
வத்திமுக வன்ற னருள்பெறுவ தெக்காலம்.

(பொ - ரை.) (ஆன்மகோடிகளின்) மோட்சத்திற்கு கேதுவான ஞானசம்பந்தமாகிய (அநுபவ) வார்த்தைகளால் (மெய்ஞ்ஞானப்) புலம்பலைப்பாட (இந்நூல் இடையூன்றி முடிதற்பொருட்டு) யானை முகத்துடன் கூடிய (மூத்த பிள்ளையாரின்) திருவருளினை அடைதல் எக்காலம்.

### நூல்.

ஆங்கார முள்ளடக்கி யைம்புலனைச் சுட்டறுத்துத்
தூங்காமற் றூங்கிச் சுகம்பெறுவ தெக்காலம்.

(பொ-ரை.) என்னோ டொப்பாரில்லையென அகந்தைப்படுதற்குக் காரணமாயுள்ள அகங்காரத் தத்துவம் காரியப்படாதபடி அடங்கச் செய்து, அகங்காரத்தினின்றும் தோன்றும் மெய், வாய், கண், மூக்கு, செவியென்னும் பஞ்சேந்திரியங்களைக் காரியப்படவொட்டாமல் கெடுத்து நித்திய சுழுத்தியில் ஒன்றுந் தோன்றாதபடி தூங்காமல் திருவருளினை முன்னிட்டு அறிவுமயமாக விருந்து தூங்கிச் சிவானந்த மடைவ தெக்காலம்.

நீங்காச் சிவயோக நித்திரைகொண் டேயிருந்து
தேங்காக் கருணைவெள்ளந் தேங்குவது மெக்காலம்.

(பொ - ரை.) கருணைவெள்ளம் போலத் தொடர்ச்சியாய் இடைவிடாது சிவராஜயோக சமாதியடைந்திருந்து மாயாகாரியங்களால் தளும்பாத சுகவாரி என்னிடத்து நிறைந்திருப்பது எக்காலம். 2

தேங்காக் கருணைவெள்ளந் தேக்கியிருந் துண்பதற்கு
வாங்காமல் விட்டகுறை வந்தடுப்ப தெக்காலம்.

(பொ-ரை.) நிறைந்துள்ள கிருபாவெள்ளம் என்னிடம் ததும்பியிருந்து அதனை யனுபவித்ததற்குப் பின்வாங்காமல் பூர்வசென்மார்ந்த புண்ணிய விசேஷம் என்னையடுத்து அதனையுண்ணும்படி செய்வது எக்காலம். 3

ஓயாக் கவலையினா லுள்ளுடைந்து வாடாமல்
மாயாப் பிறவி மயக்கறுப்ப தெக்காலம்.

(பொ-ரை.) பிரபஞ்சத்தின் கண்ணே நீக்கப் பெறாத மண், பெண், பொன் என்பவற்றால் விளையும் துன்பத்தினால், மனம் தளர்ச்சியடைந்து மெலியாமல், அசுத்த மாயாகாரியத்தால் உண்டாகும் சென்மத்தினால் விளையும் மயக்கத்தினை யொழித்துக் கொள்வது எக்காலம். 4

மாயாப் பிறவி மயக்கத்தை யூடறுத்துக்
காயா புரிக்கோட்டை கைக்கொள்வ தெக்காலம்.

(பொ-ரை.) மாயை சம்பந்தத்தா லுண்டாகிய சென்மத்தால் விளையும் பிரபஞ்ச மயக்கத்தினை அடியோடே நீக்கித் தேகமென்

ங் கோட்டை (நிலைபெறுமாறு) காயசித்தியைச் செய்து கொள் 5
வது எக்காலம்.

காயா புரிக்கோட்டை கைவசமாய்க் கொள்வதற்கு
மாயா வனுபூதி வந்தடுப்ப தெக்காலம்.

(பொ-ரை.) (காயசித்தியினால்) தேகத்தினை நிலைபெறச்செய்
துகொள்வதற்கு (சுத்த) மாயாசம்பந்தமாக என்னிடத்து சுவானு 6
பூதியாய் விளைவது எக்காலம்.

சேயாய்ச் சமைந்து செவிடூமைப் போற்றிரிந்து
பேய்போ லிருந்துன் பிரமைகொள்வ தெக்காலம்.

(கு-ரை.) (இவ்வுலகிலே) ஒரு புத்திரனாகப்பிறந்து (பிரபஞ்ச சம்பந்தமான விஷயங்கள் கேளாத) செவிடனாகவும், (தற்போத வார்த்தைகளைப்பேசாத) ஊமையனாகவும், சஞ்சரித்துப்(பிசாசால்) பிடியுண்டவன் தேகத்தில் ஒருத்தர் பண்ணும் இதாகிதங்கள் பிடித்தபேய்க்கேயாகத் தனக்குப் பாரமற நிற்பதுபோலச் (சுதந்திரமின்றி) பேய்ப்பிடிப்பான்போற் சஞ்சரித்து (சிவபெருமானாகிய) தேவரீரிடத்து மெய்யறிவுகொள்வது எக்காலம்.

பேய்போற் றிரிந்தும் பிணம்போற் கிடந்துபெண்ணைத்
தாய்போ னினைத்துந் தவமுடிப்ப தெக்காலம்.

(பொ-ரை.) பேய் ஆவேசம் கொண்டவனைப்போலச் (சுதந்
திரமின்றி) யுலாவி (பிரபஞ்சவாசனை) சிறிதும் தங்காது, நிருவி
கற்பசமாதியில் (சலனமற்ற) பிணம்போற்றங்கி (உலகிலுள்ள)
மாதர்களைத் தாய்மாரைப் போலப் பாவித்து (வாழும்) விரதத்
தினைப் பூர்த்திசெய்து கொள்வது எக்காலம். 8

கால்காட்டிக் கைகாட்டிக் கண்கள் முகங்காட்டி
மால்காட்டு மங்கையரை மறந்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை.) செம்பஞ்சூட்டிய மிருதுவானகால்களைக் காட்டியும், கைகளினால் சாடைமுதலிய காட்டியும், பற்பல சைகைகளை கண்களாற் காட்டியும், முகம் மினுக்கிக் காட்டியும், காமவிச்சையினைக்காட்டியும், வாழுகின்ற (வேசிகளாகிய) மாதர்களை மறந்து தேவரீர் திருவருள் மயமாக இருப்பது எக்காலம். 9

பெண்ணினல் லாராசைப் பிரமையினை விட்டொழிந்து
கண்ணிரண்டு மூடிக் கலந்திருப்ப தெக்காலம்.

(கு-ரை.) பெண்டன்மையுடைய மாதர்களிடத்து வைக்கும் காமவாசையான மயக்கத்தினை நீங்கிப் பௌதிக சம்பந்தமான இரண்டு கண்களையு மூடிக்கொண்டு அறிவாகிய (கண்களைத்திறந்து) தேவரீர் திருவருளில் கலந்து சுகித்திருப்பது எக்காலம்.

வெட்டுண்ட புல்போல் விரிந்தவல்குற் பைதனிலே
தட்டுண்டு நிற்கை தவிர்வதுவு மெக்காலம்.

(பொ-ரை.) கத்தியினால் காயம்பட்ட புண்ணினைப்போலப் பிளப்பினையுடைய நிதம்பமென்ற பாம்பின் படம்போன்ற அல்குலில் மனம் சிக்கிக்கொண்டு நிற்றலினின்றும் நீங்கியிருத்தல் எக்காலம். 11

ஆறாத புண்ணி லழுந்திக் கிடவாமல்
தேறாத சிந்தைதனைத் தேற்றுவது மெக்காலம்.

(போ-ரை.) எவ்விதமான மருந்தினாலேயும் சௌக்கியமடையாத புண்ணினைப்போல விருக்கும் அல்குல் (ஆசையினால்) மனம் அழுந்தியிராமல், திருவருளினை யாராயாத சிந்தையினை நன்னெறியினில் சேர்ப்பது எக்காலம். 12

தந்தைதாய் மக்கள் சகோதரரும் பொய்யெனவே
சிந்தைதனிற் கண்டு சிக்கறுப்ப தெக்காலம்.

(போ-ரை.) பிதா, மாதா, புத்திரர், சோதரர் வந்தவாறும் போனவாறும் மாயாஜாலமெனவே மனத்தினால் உண்மைவிசாரித்துத் தெளிந்து பிரபஞ்ச மயக்கை யொழிப்ப தெக்காலம். 13

மன்னுயிரைக் கொன்று வதைத்துண் டுழலாமல்
தன்னுயிர்போ லெண்ணித் தவமுடிப்ப தெக்காலம்.

(போ-ரை.) (ஆடு, கோழி, மச்ச முதலிய) ஜெந்துக்களைக் கொன்றும் (அவற்றை) உபத்திரவப்படுத்தியும் வயிறுநத்தின்றும் பாவசொரூபிகளாகத் திரியாமல் தன்னுயிரைப்போலவே பிறவுயிர்களையும் பாலித்துக் கொல்லா விரதத்தினைப் பூர்த்திசெய்வது எக்காலம். 14

பாவியென்றே பேர்படைத்துப் பாழ்நரகில் வீழாமல்
ஆவிநின்ற சூத்திரத்தை யறிவதினி யெக்காலம்.

(போ-ரை.) பிறருக்குத் தீங்குசெய்வதினால் பாவியென்று யாரும் சொல்லும்படியானபேரை வகித்து அதற்குப் பலனாகப் பாழாகிய நரகத்தில் வீழ்ந்து வருந்தாமல் உயிரானது உடலில் நிலைத்து நின்ற இரகசியத்தினைத் தெரிவித்துக்கொள்வது எக்காலம்.

உளியிட்ட கல்லு முருப்பிடித்த செஞ்சாந்தும்
புளியிட்ட செம்பும் பொருளாவ தெக்காலம்.

(போ-ரை.) உளியைக்கொண்டு செதுக்கியமைத்த சிலைவுருவத்தினையும், செவ்வியசுண்ணாம்பு சாந்தினாலமைத்த வுருவத்தினையும், புளியினாற் சுத்தம்பண்ணப்பட்ட செம்பு விக்கிரகத்தையும்,

சிலைசாந்து, விக்கிரகமென்று சாமானியமாகப் பாவிக்காமல் அவற்றையதிட்டித்துக்கொண்டு சிவபெருமான் அனுக்கிரகிக்கும் உண்மைப்பொருள் இவ்வகையெனத் தெரிவது எக்காலம். 16

வேடிக்கை யுஞ்சொகுசு மெய்ப்பகட்டும் பொய்ப்பகட்டும்
வாடிக்கை யெல்லா மறந்திருப்ப தெக்காலம்.

(பொ - ரை.) பிரபஞ்ச வேடிக்கையினும், அழகாக நடப்பதிலும், தேகத்தை யலங்கரித்துக் கொள்வதிலும், பெரியாரைப் போல நடிப்பதிலும், செய்யும் வழக்கத்தினையெல்லாம் மறந்து எவற்றினும் பற்றற்றிருப்பது எக்காலம். 17

பட்டுடை பொற்பணியும் பாவனையுந் தீவினையும்
விட்டுவிட்டுன் பாதம் விரும்புவ தெக்காலம்.

(பொ-ரை.) பீதாம்பர முதலியவைதை தரித்துக்கொள்ளுவதிலும் ஆபரணங்களால் அலங்காரம் செய்துகொள்வதிலும், பிறபுவைப்போல் நடித்தலிலும், கொடிய பாவங்கள் செய்வதிலு மிருந்து நீங்கித், தேவரீர் திருவடியினையே விரும்புவது எக்காலம். 18

ஆமைவரு மாட்கண் டைந்தடக்கஞ் செய்தாற்போல்
ஊமை யுருக்கொண் டொடுங்குவ தெக்காலம்.

(பொ-ரை.) ஆமையானது தனக்குச் சமீபத்தில் வரும் மனிதரைக்கண்டு நீரிலடைந்து தனது தலை நாலுகால் என்னுமைந்துறுப்புகளையும் தன்னுடற்குளிழுத்துக் கொள்ளுதல்போல மெய், வாய், கண், மூக்கு, செவி யென்னு மைந்து இந்திரியங்களின் வழியே செல்லும் விஷயங்களை யடக்கிக்கொண்டு மவுனநிலையுமற்று விகாரமுமற்று ஒடுங்கியிருப்பது எக்காலம். 19

தண்டுகையுஞ் சாவடியுஞ் சாளிகையு மாளிகையும்
கண்டு களிக்குங் கருத்தொழிவ தெக்காலம்.

(பொ-ரை.) நிலையாக வொருவர்பா லிருக்கத்தகுந்த தல்லன வாகிய பல்லக்கினையும், சத்திரத்தினையும், பணப்பையினையும், வீட்டினையும் பார்த்து எந்நாளும் தனக்குச் சொந்தமெனச் சந்தோஷித்திருக்கும் எண்ணத்தினை நீக்குவது எக்காலம். 20

அத்த னிருப்பிடத்தை யாராய்ந்து பார்த்துநிதஞ்
செத்த சவம்போற் றிரிவதினி யெக்காலம்.

(பொ-ரை.) சிவபெருமான் சருவ வியாபகமாகவும், குருலிங்க சங்கமங்களிலும், சிவ்பெருமானெழுந்தருளியிருக்கும் உண்மையை மெய்கண்ட சாஸ்திரங்களைக்கொண்டு விசாரித்துத் திருவருளை தரிசித்து, எந்நாளும் உயிர்நீங்கிய பிணம்போலப் பிரபஞ்ச சுதந்திரமின்றிச் சஞ்சரிப்பது எக்காலம். 21

ஒழிந்ததரு மத்தினைவைத் துள்ளெலும்பு வெள்ளெலும்பா
கழிந்தபிணம் போலிருந்து காண்பதினி யெக்காலம்.

(பொ-ரை.) பாவத்தினின்று நீங்கி பதிதருமத்தினை ஆதாரமாக வைத்துக்கொண்டு உடலின்கண்ணேயுள்ள வெளுத்த வெலும்பாகித் தசைகழிந்த சவம்போல வாழ்ந்து ஊனைத்தரிசிப்பது எக்காலம். 22

அற்ப சுகமறந்தே யறிவையறி வாலறிந்து
கெர்ப்பத்தில் வீழ்ந்துகொண்டு கோளறுப்ப தெக்காலம்.

(பொ-ரை.) பிரபஞ்ச சம்பந்தமான சிற்றின்பத்தினை மறந்து அறிவு சொரூபமாகவுள்ள சிவபெருமானை திருவருள் முன்னிட்டவான்ம வறிவினாற்றெரிந்து பிறவியில் தங்கும்படி வாய்ந்த தீமையை நீக்கிக்கொள்வது எக்காலம். 23

கருப்படுத்தி யென்னையமன் கைப்பிடித்துக் கொள்ளாமுன்
உருப்படுத்தி யாளவுடன் படுவ தெக்காலம்.

(பொ-ரை.) பிரமன் மனிதனாகப்பிறப்பித்து, வாழ்ந்தபின்னர் என்றனை இயமன் பிடித்துக் கொண்டேகா முன்னம், சிவமாந்தன்மைசெய்து ஆட்கொள்ளக் கருணைகூர்தல் எக்காலம். 24

தூண்டு விளக்கணைய தொடர்ந்திருள்முன் சூழ்ந்தாற்போல்
மாண்டு பிழைத்துவந்த வகைதெரிவ தெக்காலம்.

(பொ-ரை.) தூண்டுகோலில்லாத தீபமானது அணைந்து விட உடனே இருள்தொடர்ந்து எங்கும் சூழ்ந்துகொண்டு ஒளியும் இருளும் மாறிமாறி வருதல்போல அடிக்கடி இறந்து பிறந்து உலகில் வந்தவிதம் விருப்பு வெறுப்பினால் விளைந்த கன்மத்தினாலெனத் தெரிந்து கொள்வது எக்காலம். 25

தூரியினின் மீன்போற் சுழன்றுமனம் வாடாமல்
ஆரியனைத் தேடி யடிபணிவ தெக்காலம்.

(பொ-ரை.) பெருவலையினிற்பட்ட மீனைப்போல பிரபஞ்ச மாயாவலையிற்பட்டுத் திரிந்து மனமிளைக்காமல் குருநாதனைத்தேடிக்கண்டு அவன்றிருவடியினை வணங்குவது எக்காலம்.

எண்ணூ றுகமிருந்து மெய்தாத வீடுபெற
வெண்ணீறு பூசி விளங்குவது மெக்காலம்.

(பொ-ரை.) எண்ணூறு யுகம் உலகத்தில் வாழ்ந்திருந்தாலும், அடையக்கூடாத மோட்சத்தினையடைய வேண்டுமாயின் விபூதியினைத் தேகமனைத்தினிலும் அணிந்துக்கொண்டு மௌன நிலையில் வாழ்ந்திருப்பது எக்காலம். 27

அவவேடம் பூண்டிங் கலைந்து திரியாமற்
சிவவேடம் பூண்டு சிறந்திருப்ப தெக்காலம்.

(போ-ரை.) புறச் சமயத்தினர்க்குரிய அப்பிரயோசனமான வேடத்தினைத்தரித்து இவ்வுலகில் நாய்போலஅலைந்து உலாவாமல் பரிசுத்தமான சைவசமயத்திற்குரிய (விபூதிருத்திராட்சமான) மங்களவேடந்தரித்துச் சிவஞானச் செல்வத்தில் சிறப்படைந்து இருப்பதெக்காலம்.

அண்டருக்கா நஞ்சருந்தி யம்பலத்தி லாடுசிவன்
தொண்டருக்குத் தொண்டனெனத் தொண்டுசெய்வ தெக்காலம்.

(போ-ரை.) தேவர்களனைவரும் சாகாதிருக்கும் பொருட்டு விஷத்தினையுண்டு தில்லைச் சிற்றம்பலத்திலே ஆனந்த நிர்த்தனஞ் செய்யும் நடராஜமூர்த்தியின் அடியார்கட்கு அடியனாகி அவர்கட்கு பணிசெய்வது எக்காலம். 28

பன்றி வடிவெடுத்துப் பாரிடந்து மால்காணாக்
குன்றில் விளக்கொளியை கூறுவது மெக்காலம்.

(போ-ரை.) விஷ்ணுவானவர் பன்றியுருவினையெடுத்து நூறு வருஷகாலம் பூமியினை யகழ்ந்தும் காணப்படாத திருவண்ணாமலையின் முடியில் விளங்கும் ஞானதீபத்தினை வாயாரச்சொல்லித் துதிப்பது எக்காலம். 30

தித்திக்குந் தெள்ளமிர்தை சித்தாந்தத் துட்பொருளை
முத்திக்கு வித்தை முதனினைப்ப தெக்காலம்.

(போ-ரை.) சிவனடியார்கள் உள்ளத்தில் தித்திக்கும் படியான்தேவாமிர்தம் போன்றவனை சைவ சித்தாந்தத்திலே விளங்கும்

சுத்தாத்துவித முத்தியினுக்கு வித்தினை எத்தேவர்கட்கும் முதலா
கத் தியானிப்பது எக்காலம். 31

வேதாந்த வேதமெல்லாம் விட்டொழிந்த நிஷ்டையிலே,
ஏகாந்த மாக விருப்பதினி யெக்காலம்.

(பொ-ரை.) ஆன்மகோடிகட்குப் பொதுவாகச் சொல்லப்பட்
டுள்ள உபநிடதங்களுடன்கூடிய வேதமனைத்தையும் விட்டுச் சத்தி
நிபாத உத்தமர்கட்குச் சிறப்பாகச் சொல்லப்பட்டுள்ள சிவாகமத்
தில் குறித்த நிஷ்டையினில் தனியாகவிருப்பது எக்காலம். 32

பற்றிடத்தைத் தேடியென்றன் வாழ்நாளைப் போக்காம
லுற்றிடத்தை தேடி யுறங்குவது மெக்காலம்.

(பொ-ரை.) பகிர்முகமாகவுள்ள அந்நிய பிரபஞ்சத்தினைத்
தேடி எனது ஆயுள் நாள்களை வீணாக்காமல் அந்தர்முகமாயுள்ள
அருளிடத்தினைத்தேடி யுண்மையறிந்து சிவானந்த யோகநித்திரை
யிலிருப்பது எக்காலம். 33

இன்றுளோர் நாளையிருப்பதுவும் பொய்யெனவே
மன்றுளோர் சொல்லும் வகையறிவ தெக்காலம்.

(பொ-ரை.) இன்றையதின மிருப்பதுவும் அடுத்தநாளிருப்
பதுவும் நிச்சயமில்லையென்று பெரியோர்கள் சொல்லும் தன்மை
யினைத் தெரிவது எக்காலம். 34

கஞ்சா வபினியுடன் கள்ளுண்டு வாடாமல்
பஞ்சாவ மிர்தம் பருகுவது மெக்காலம்.

(பொ-ரை.) அறிவை மயக்கும் கஞ்சா, அபினி, கள் இவை
களைத் தின்றும், குடித்தும் மயக்கமடையாமல், சிவபெருமானுக்கு-

னும் மயக்கமடையாமல், சிவபெருமானுக்கு அபிடேகித்த தயிர், பால், நெய், சருக்கரை, பழம் கூடிய பஞ்சாமிருதத்தினை உண்ணுவது எக்காலம். 35

செஞ்சலத்தி னாற்றிரண்ட ஜெனனமோ க்ஷம்பெறவே
சஞ்சலத்தை விட்டுன் சரணடைவ தெக்காலம்.

(போ-ரை.) கருப்பாசயத்தினில் சிவந்த இரத்தத்தினால் வடிவெடுத்த பிறப்பானது, மோட்சமடையவேண்டுமாயின் பிரபஞ்ச சம்பந்தமாகவுள்ள மாயாகாரிய துன்பத்தினின்று நீங்கித் தேவரீர் திருவடியினை யடைவது எக்காலம். 37

கும்பிக் கிரைதேடிக் கொடுப்பா ரிடந்தோறும்
வெம்பித் திரிகை விடுப்பதினி யெக்காலம்.

(போ-ரை.) வயிற்றினுக்கென்று சாப்பாடுதேடி அது கொடுப்பாருடைய வீடுதோறும் மனம்புழுங்கித் திரிதலைத் தடுத்துக்கொண்டு இருக்குமிடந் தேடிவர வாழ்தல் எக்காலம். 37

ஆடுகின்ற சூத்திரந்தா னறுமளவு மேதிரிந்து
போடுகின்ற நாள்வருமுன் போற்றுவது மெக்காலம்.

(போ-ரை.) உலகத்தில் சஞ்சரிக்கின்ற இத்தேகமானது சாகுமளவும் உலாவி இறக்குநாளை யடைவதற்கு முந்தியே தேவரீரைத்துதிப்பது எக்காலம். 38

நவசூத் திரவீட்டை நானென் றலையாமல்
சிவசூத் திரத்தைத் தெரிந்தறிவ தெக்காலம்.

(போ-ரை.) ஒன்பது துவாரங்களுடன் கூடிய உடலினை ஆன்மாவாகிய நானென்று அலையாமல், சிவஞானபோத சூத்திரத்தினைப், படித்தறிவது எக்காலம். 39

மறந்து மலசலங்கள் மாயும்புழுக் கூட்டைவிட்டுக்
கரந்து னடியிணைக்கீழ் கலந்துநிற்ப தெக்காலம்.

(பொ-ரை.) அறிவு மயங்கி மலமும் சலமும் தாமே வழியும் படி இறந்துபோகும் புழுக்கள் நிறைந்த தேகத்தினின்றும் நீங்கி, நினது திருவருளில் மறைந்து தேவரீர் திருவடிக்கீழ் இரண்டறக் கலந்து தங்குவது எக்காலம். 40

இம்மைதனிற் பாதகனு யிருவினைக்கீ டாயெடுத்த
பொம்மைதனைப் போட்டுன்னைப் போற்றிநிற்ப தெக்காலம்.

(பொ-ரை.) இப்பிறப்பில் பாவியாக பூர்வஜென்மத்திற்செய்த நல்வினை தீவினைக்குத் தக்கபடி யெடுத்த பொய்மையாகிய உடலை நீக்கிவிட்டுத் தேவரீரைத் தோத்தரித்து வாழ்வது எக்காலம். 41

உப்பிட்ட பாண்ட முடைந்துகருக் கொள்ளுமுன்னே
அப்பிட்ட வேணியனுக் காட்படுவ தெக்காலம்.

(பொ-ரை.)உப்பினையடைத்துவைத்துள்ள பானை உளுத்துப் போவதுபோல நிலையுற்றிராதபடி அழிந்து, மறுபடியும் பிறவியெடுத்தன் முன்னமே, கங்கையினைத் தரித்த சடாபாரத்தினையுடைய பரமசிவனுக்கு அடிமையாவது எக்காலம். 42

சேவை புரிந்து சிவரூபக் காட்சிகண்டு
பாவைதனைக் கழித்துப் பயனடைவ தெக்காலம்.

(பொ-ரை.) ஆலய வழிபாடுசெய்து சிவலிங்கப் பெருமான் திருவுருத்தினைத் தரிசித்து, மாதர் மயக்கத்தினை நீக்கி, மோட்ச பிரயோசனத்தை யடைவது எக்காலம். 43

காண்டத்தை வாங்கிக் கருமேக மீண்டதுபோல்
பாண்டத்தை நீக்கிப் பதமடைவ தெக்காலம்.

(பொ-ரை.) சமுத்திரத்தினின்றும், உப்புநீரைக்குடித்து கரிய மேகமானது திரும்பி நன்னீரைப்பொழிவதுபோல தேகத்தினின்றும் மலத்தோடன் சம்பந்தித்த உயிர்நீங்கித், திருவருளினைப்பெற்றுந்து மேலான பதத்தினை யடைவது எக்காலம். 44

சோற்றுத் துருத்தியினைச் சுமந்தலைந்து வாடாமல்
ஊத்தைச் சடம்போட் டுனையடைவ தெக்காலம்

(பொ-ரை.) சாதத்தினை யடைத்துவைக்கும் பையாகிய உடலைத் தாங்கி அலைந்துபோகாமல் நாற்றமுற்ற தேகத்தை விட்டுத் தேவரீரை யடைவது எக்காலம். 45

தொடக்கைச் சதமெனவே சுமந்தலைந்து வாடாமல்
உடக்கை கழற்றி யுனையறிவ தெக்காலம்.

(பொ-ரை.) நரம்பாதிகளால் கட்டுப்பட்டுள்ள தேகத்தினை நிச்சயமென எண்ணித் தாங்கித் திரிந்து இளைக்காமல், ஒருங்கு கூடியுள்ள தத்துவங்களை நீங்கித் தேவரீரைத் தெரிந்துகொள்வது எக்காலம். 46

ஆசைவலைப் பாசத் தகப்பட்டு மாயாமல்
ஓசைமணித் தீபத்தி லொன்றிநிற்ப தெக்காலம்.

(பொ-ரை.) பிரபஞ்சமென்னும் ஆசையாகிய மாயவலையில் சிக்கிக்கொண்டழியாமல், நாத தத்துவத்திலே தோன்றும் அழகிய சிவச்சோதியிலிரண்டறக் கலந்து வாழுதல் எக்காலம். 47

மையின் இவ்வுடற்பற்றைவிட்டு அம்பலத்தரசனையே யடையவே ண்டுவதே தகுதியெனக் குறிப்பித்தனர். திருக்கடைக்காப்பு "நிணங்குடர்தோ ளரம்பென்பு சேராக்கை தானிலாயதன்றாற், குணங்களார்க்கல்லது குற்றநீங்காதெனக் குலுங்கினாயே, வணங் குவார் வானவர் தானவர் வைகலு மணங்கொண்டேத்து, மணங் கனூர் தொழுதுய்யலாமையல் கொண்டஞ்சனெஞ்சே" என்றத னாற்காண்க.

---

நான்காவது

## கச்சித்திருவகவல்.

நிலைமண்டில வாசிரியப்பா.

திருமால் பயந்த திசைமுக னமைத்து
வருமேழ் பிறவியு மானிடத் துதித்து
மலைமகள் கோமான் மலரடி யிறைஞ்சிக்
குலவிய சிவபதங் குறுகா தவமே
மாதரை மகிழ்ந்து காதல்கொண் டாடும்
மானுடர்க் கெல்லாம் யானெடுத் துரைப்பேன்
விளிவெளி மாக்க டெளிவுறக் கேண்மின்.

(பொ - ரை.) நாராயணமூர்த்தியானவர் பெற்ற சதுர்முகப் பிரமன் படைத்துவரும் எழுபிறவிகளிலும் மனித சென்மமாகப் பிறந்து, பார்வதியாருடைய தலைவனாகிய சிவபெருமானது தாம ரைமலரைப்போன்ற திருவடியினை வணங்கி விளங்குகின்ற சிவப தவியினை அடையாமல் வீணாக மாதர்களை (எண்ணிச்) சந்தோ ஷித்து ஆசைபூண்டு கொண்டாடுகின்ற மாந்தர்களுக்கெல்லாம் நான் (சில உண்மைகள்) எடுத்துச்சொல்வேன்! காதலுக்குரிய எளிமையினை வாய்ந்த மாந்தர்கள் தெளிவடையக் கேளுங்கள் (அவை யென்னையோ வெனின்.)

(கு - ரை) பூர்வசென்மத்தில் மாடுமுதலியவைகளாயிருந்து புண்ணியமிகுதியால் அடுத்தசென்ம மனிதப்பிறவி யெடுத்தவர்கட்கு அதுமுதல் இரண்டொரு சென்மம் வரையில் மலத்தடிப்பு அதிகமாகையால் அவர்களறிவிற்குச் சிவபெருமானுண்மை விளங்காது என்பது சகஜம். எழுதரம் மனிதர்களாகப் பிறந்தவர்கட்கு அம்மலத்தடிப் பிரியாதாகலின் இத்தகையினரும் சிவபெருமான் உண்மை தெரியாதிருக்க அவர்பாலிரங்கி, எழ்பிறவியும் * * * ஆறுகாது என்றனர், ஈடணைகள் மூன்றில் மண், பொன் இரண்டினையும் விட்டு "மாதரை மகிழ்ந்து" என்று பெண்களை மாத்திரம் குறித்ததென்னையோ வெனில்? பொன்னைவிரும்புவதும் மண்ணை விரும்புவதுங் காதல்கொண்டுள்ள பெண்ணினைப்பற்றியே யாகலாமென்க. இங்ஙனம் முதல்வினை மறந்து மாதர் மயலில் மயங்குவார் மிருகத்தினை யொத்தாரென்பார் மாக்களென்னாது மக்களென்றார்.

முள்ளுங் கல்லு முபன்று நடக்கும்
உள்ளங் காலைப் பஞ்சென வுரைத்தும்
வெள்ளெலும் பாலே மேவிய கணைக்கால்
துள்ளும் வராலெனச் சொல்லித் துதித்தும்
தசையு மெலும்புந் தக்கபுன் குறக்கை
இசையுங் கதலித் தண்டென வியப்பியும்
நெடுமூட ருங்கி நின்றிடு மிடையைத்
துடிபிடி யென்று சொல்லித் துதித்தும்
மலமுஞ் சலமூர் வழும்புந் திரையும்
அலையும் வயிற்றை யாலிலை யென்றும்
சிலந்தி போலக் கிளைத்துமுன் னெழுந்து
நொண்டு விம்மிச் சீப்பாய்ந் தேறி

மருவ வயற்புருடன் வருநேரங் காணும
லுருகுமனம்போலென் னுள முருகுவ தெக்காலம்.

(பொ-ரை.) தன்னைக் களவாகப் புணரும் வேறு நாயகன் வர வேண்டிய காலத்தில், வாக்காணாதபோது நாயகிக்கு இறங்கும் மனம்போல, அடியேனுடைய நெஞ்சு தேவரீரை நோக்கிக் கரைவது எக்காலம். 56

தன்கணவன் றன்சுகத்திற் றன்மனம்வே றானதுபோ
லென்கருத்தி லுன்பதத்தை யேற்றுவது மெக்காலம்.

(பொ-ரை.) தன்னுடைய சொந்த கணவனுடன் சுகத்தை யனுபவித்துக்கொண்டிருக்கிற வொருபெண் வேறொரு நாயகன் மீதுள்ள மோகத்தினால் தன்மனம் வேறுபட்டிருப்பது போல் பிரபஞ்ச போகங்களை யானனுபவிக்கிற காலத்தும் என் மனம் உன் வசமாகவிருந்து உருகுதல் எக்காலம். 57

கூடிப் பிரிந்துவிட்ட கொம்பனையைக் காணமல்
தேடித் தவிப்பவன்போல் சிந்தைவைப்ப தெக்காலம்.

(பொ-ரை.) வெகு காலமாகக் கலந்திருந்து திடீரென நீங்கிய தன் மனைவியைக்காணமல் எங்குந்தேடிச் சஞ்சலப் படுபவன்போலத் தேவரீரிடத்து மனம் வைப்பது எக்காலம். 58

எவ்வனத் தின்மோக மெப்படியுண் டப்படிபோல்
கவ்வனத்தி யானம் கருத்துவைப்ப தெக்காலம்.

(பொ-ரை.) யெவ்வன வயதுடைய பெண்ணின்மீது ஆசை எங்ஙன முண்டாமோ அதுபோன்று மனத்தியானத்தில் பரமனை நெஞ்சில் வைப்பது எக்காலம். 59

கண்ணு லருவி கசிந்துமுத்துப் போலுதிரச்
சொன்னபரம் பொருளைத் தொகுத்தறிவ தெக்காலம்

(போ-ரை.) கண்களினால் ஆனந்தக்கண்ணீர் அருவியினைப் போலக் கசிந்து முத்தினைப்போலச்சிந்த வேதாந்த சாத்திரத்தாற் புகழப்பட்ட சிவபரம்பொருளை ஆராய்ந்தறிவது எக்காலம். 60

ஆக மிகவுருக வன்புருக வென்புருகப்
போகவனு பூதி பொருந்துவது மெக்காலம்.

(போ-ரை.) உடல் புளகிக்க, அன்புமேலிட, என்பு நெக்கு விடச் சிவபோகச் சிவானுபூதி நிலையினைப் பொருந்துவதும் எக்காலம். 61

நீரிற் குமிழிபோ னிலையற்ற வாழ்வைவிட்டுன்
பேரிற் கருணைவெள்ளம் பெருக்கெடுப்ப தெக்காலம்.

(போ-ரை.) நீரினிலே யுதித்தொடுங்கும் குமிழியினைப்போல நிலையில்லாத வாழ்க்கையை வெறுத்துத் தேவரீர்மீது ஆனந்த வெள்ளம் என்னிடத்துத் ததும்புவது எக்காலம். 62

அன்பை யுருக்கி யறிவையதன் மேற்புகட்டித்
துன்ப வலைப்பாகத் தொடக்கறுப்ப தெக்காலம்.

(போ-ரை) அன்பினைப்பெருக்கி யதன்வழியாக அறிவைச் செலுத்திப் பிரபஞ்சமுகமாகவுள்ள தீமையான மாயாவலையின் சம்பந்தத்தை யொழித்துக்கொள்வது எக்காலம். 63

கருவின் வழியறிந்து கருத்தைச் செலுத்தாமல்
அருவி விழிசொரிய வன்புவைப்ப தெக்காலம்.

(போ-ரை.) பிறப்பினுக் கேதுவாயுள்ள நெறியினைத் தெரிந்து அந்நெறியினில் மனத்தினைச் செலுத்தாமல் விழிகளினின்

றும் அருவினைப்போல நீர்வழிய தேவரீரிடத்து அன்பு பாராட்டு வது எக்காலம். 64

தெளியத் தெளியத் தெளிந்தசிவா னந்தத்தேன்
பொழியப் பொழியமனம் பூண்டிருப்ப தெக்காலம்.

(பொ-ரை.) மனமானது அசைவற அசைவறநின்ற அவசரத் துக் கலக்கமற்ற சிவானந்தத்தேன் என்னுள் அடிக்கடி சொரிய அதனால் மனம் ஆனந்தங்கொண்டிருப்பது எக்காலம். 65

ஆதார மூலத் தடியிற் கணபதியை
பாதார விந்தம் பணிந்துநிற்ப தெக்காலம்.

(பொ-ரை.) குய்யத்திற்கும் குதத்திற்கும் நடுவேயுள்ள முக் கோணவடிவாகிய மூலாதாரத்தின் மத்தியிலெழுந்தருளியிருக்கும் ஓங்காரசொரூபமாகிய கணபதியின் திருவடித் தாமரையினை வணங் கியிருப்பது எக்காலம். 66

மண்வளைந்த நற்கீற்றில் வளைத்திருந்த வேதாவைக்
கண்வளைந்து பார்த்துள்ளே கண்டிருப்ப தெக்காலம்.

(பொ-ரை.) மூலாதாரத்தின் இரண்டு விரற்கடைக்கு மேல் பிருதிவியின் கூறுகிய நாற்கோண வடிவாகிய சுவாதிட்டானத் தினடுவில் எழுந்தருளியிருக்கும் பிரமாவை உண்முகமாகக் கண்ணை வைத்துப்பார்த்து மனத்தே தரிசித்திருப்பது எக்காலம். 67

அப்புப் பிறைநடுவே யமர்ந்திருந்த விட்டுணுவை
உப்புக் குடுக்கையுள்ளே யுணர்ந்தறிவ தெக்காலம்.

(பொ-ரை.) சுவாதிட்டானத்தின்மேல் எட்டுவிரற் கடைக்கு மேலுள்ள நாபிக்கமலத்தில், அப்புவின் கூறுகிய மூன்றாம்பிறை

வடிவாகிய (மணிபூரத்தினடுவில்) எழுந்தருளியிருக்கும் விட்டுணுவை உப்பிட்ட குடுக்கைபோன்ற (நிலையற்ற) தேகத்தினுள்ளே தெரிந்து கொள்வது எக்காலம். 68

மூன்று வளையமிட்டு முளைத்தெழுந்த கோணத்தில்
தோன்று முருத்திரனைத் தொழுதுநிற்ப தெக்காலம்.

(பொ-ரை.) (மணிபூரத்தின் மேற்) பத்துவிரற்கடை பிரமாணமுள்ள (இருதயத்தில்) தேயுவின் கூறாகிய முக்கோண வடிவாகிய (அனாகதத்தினடுவில்) எழுந்தருளியிருந்த உருத்திர மூர்த்தியை வணங்கி நிற்பது எக்காலம். 69

வாயுவறு கோணமதில் வாழு மகேச்சுரனைத்
தோயும் வகைகேட்கத் தொடங்குவது மெக்காலம்.

(பொ-ரை.) (அனாகதத்தின்மேற்) பத்து விரற்கடை பிரமாணமுள்ள கண்டத்தில் வாயுவின் கூறாகிய அறுகோண வடிவாகி (விசுத்தியினடுவில்) எழுந்தருளியிருக்கும் மகேச்சுரனை அடையும் விதம் விசாரிப்பது எக்காலம். 70

வட்டவழிக் குள்ளே மருவுஞ் சதாசிவத்தைக்
கிட்டவழி தேடக் கிருபைசெய்வ தெக்காலம்.

(பொ-ரை.) (விசுத்தியின்மேல்) பன்னிரண்டு விரற்கடைபிரமாணமுள்ள லலாடத்தில் ஆகாயகூறாகிய வட்டவடிவாகிய (ஆஞ்ஞையினடுவில்) எழுந்தருளியிருக்கும் சதாசிவத்தினை நெருங்கும் வழிதேடக் கிருபை புரிவது எக்காலம்.

உச்சிக் கிடைநடுவே யோங்குகுரு பதத்தை
நிச்சயித்துக் கொண்டிருந்து நேர்வதினி யெக்காலம்.

உண்ணீர் பாயு மோசைச் செழும்புண்
மால்கொண் டறியா மாந்தர் புகும்வழி
நோய்கொண் டொழியா நுண்ணியர் போம்வழி
தருக்கிய காமுகர் சாரும் படுகுழி
செருக்கிய காமுகர் சேருஞ் சிறுகுழி
பெண்ணு மாணும் பிறக்கும் பெருவழி
மலஞ்சொரிந் திழியும் வாசற் கருகே
சலஞ்சொரிந் திழியுந் தண்ணீர் வாசல்.

(பொ-ரை.) தோலும், மாமிசமும் நெருங்கிச் சீழ்வடிகின்றகாமக்குகையாம் கருவோற்பத்தியாகும் கழனியாம், சூதகம்வழிகின்றதுவாரத்தினையுடையவாயிலாம், எட்டுச்சாணுடலிருக்கும் உடல் வெளிவரும் பெரியவழியாம், உலகத்தில் (ஆன்மாக்களின்) இந்திரியத்தினை யொழித்தற்கேற்ற மறைந்த இடமாம், அத்தகைய இடத்தினை விரும்பிக்காமாந்தகாரத்தினால் தாமெக்காலத்தும், ஆசைகொண்டிருக்கும உடலின் மத்தியிலுள்ள பெரியவாசலாம், சந்திரனைச் சடாபாரத்திலணிந்த சிவபெருமான் திருவருளினையடையாதவர் இருந்து திரிகின்ற மெலிவான பெரியவழியாம்; இது புண்ணுக்குச் சமானமென்று புடவையைக்கொண்டு மூடியும் உள்ளே யிருந்து நீரினை யூற்றும் ஓசையுடன் கூடிய சிவந்த புண்ணும், காமவாசை கொண்டு (சிவபெருமான் திருவருளினையறியாத மாந்தர்கள் நுழைகின்ற வழியாகும், காமநோய்பெற்று அது நீங்காத அற்பர்கள் போகும் வழியாகும், கருவம் கொண்ட காமிகள் நெருங்கும் படுகுழியாம், செருக்கினையுடைய காமிகள் சேருகின்ற சிறியகுழியாம், பெண்ணும் ஆணும் பிறப்பதற் கேதுவாகிய பெரியவழியாம், மலமானது வழிந்து இறங்குந் தண்ணீர் வாசலாம்.

இத்தை நீங்க ளினிதெ னவேண்டா
பச்சிலை யிடினும் பத்தர்க் கிரங்கி
மெச்சிச் சிவபத வீடருள் பவனை
முத்தி நாதனை மூவா முதல்வனை
அண்ட ரண்டமு மனைத்துள புவனமுங்
கண்ட வண்ணலைக் கச்சியிற் கடவுளை
ஏக நாதனை யிணையடி யிறைஞ்சுமின்
போக மாதரைப் போற்றுத லொழிந்தே.

(பொ - ரை.) இத்தகைய (நிதம்பத்தினை) நீங்கள்சுகமானதென்றுவிரும்பாமல், பொதுமகளிரைப் புகழ்தலின்று நீங்கி (நீரும்) பச்சிலையிடினும் அடியார்களுக்கு (மனம்) இரங்கி வியந்து பாராட்டித் (தமது) சிவபதமாகிய மோட்சவீட்டினைப் பாலிக்கின்ற பெருமானை மோட்சத்தினுக்குத் தலைவனை, நித்தியமாயுள்ள முதல்வனை அண்டபகிரண்டங்களையும் பதினான்கு புவனங்களையும் காரியப்படுத்திய தலைவனை, காஞ்சிமாநகரத்தில் எழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனை, தன்னேந்தனியனை, (அவனது) இரண்டு திருவடிகளையும் தொழுமின்கள்.

(சு - ரை.) இதுகாறுமெடுத்துக் கூறியதக்கவர்களாலே யருவருக்கத்தகுந்த அங்கத்தினுக் காசைப்படா திருக்கவேண்டு மென்பார். "இனிதெனவேண்டாம்" என்றனர், வெறும் பச்சிலையினைப்பறித்துப் பாமனையருச்சிக்கினும் பத்தருக்குப் பரிந்தருள், செய்வானென்பார், "பச்சிலையிடினும் பத்தர்க்கிரங்கி என்றனர் தாயுமானவர், "கல்லாலெறிந்துங் கைவில்லாலடித்துங் கனிமதுரச், சொல்லாற்றுதித்துகற்பச்சிலை தூவியுந்தொண்டரினம், மெல்லாம்பிழைத்தன ரன்பற்றநானினியேது செய்வேன், கொல்லாவிரதியர்நேர்

னத்தினை நிலையென வெண்ணிக் காத்துவருகின்ற தேகம்நீங்கி (புரியட்டகமாகிய) சூக்கும தேகம் வந்து விடில் இனி யெந்தச் செனனத்தினைக் கொண்டு நித்திய வாழ்வடையுந்தன்மை யறிவது எக்காலம்.

நட்ட னடுவினின்று நற்றிரோ தாயியருள்
கிட்டவழி காட்டிக் கிருபைசெய்வ தெக்காலம்.

(பொ - ரை.) ஆன்மாவின் இருதயத்திலேயிருந்து பின்னர் அருளைவிளைவிக்கும் நல்ல திரோதாயி யென்னுஞ் சத்தியானது, சிவபெருமான் திருவருளினையடையும் நெறியினைத் தெளிவித்துக் கருணைபுரிவது எக்காலம். 81

நானேநா னென்றிருந்தேன் நடுவினிற் கட்டழகி
தானே வெளிப்படுத்தித் தருவனென்ப தெக்காலம்.

(பொ-ரை.) ஆன்மாவாகிய நானே பிரமமென்றிருந்தேன், அவ்வமயம் எனதிருதயத்தில் திருவருட்சத்தி வலிய வெளிவந்து எனக் கன்னியமாகிய முதல்வ னொருவனைக் காட்டிவைப்பது எக்காலம். (82)

அடர்ந்த மனக்காட்டை யஞ்செழுத்தாம் வாளாலே
தொடர்ந்து தொடர்ந்துவெட்டிச் சுடுவதினி யெக்காலம்

(பொ-ரை.) அஞ்ஞானத்தால் நெருங்கிய மனமாகிய வனத்தினைப் பஞ்சாக்கர மென்னும் வாளாயுதத்தினாலே அடிக்கடிச் சேதித்து மறுபடியும் தலையெடாதபடி சிவத்தியானத்தால் கொளுத்திவிடுவது எக்காலம். 83

ஐந்து பொறிவழிபோ யலைந்துமிந்த பாழ்மனதை
வெந்துவிழப் பார்த்து விழிப்பதினி யெக்காலம்.

(பொ-ரை.) பஞ்சேந்திரியங்களின் வழியாக சென்றலைந்த இந்த வீண் மனத்தினைத் தலையெடாதபடி யிருக்கத் திருவருளைப்பெற்று பார்த்துக் கொண்டிருப்பது எக்காலம். 84

இனமாண்டுசேர்ந்திருந்தோ ரெல்லோருந்தான்மாண்டு
சினமாண்டு போகவருள் சேர்ந்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை.) பிரபஞ்ச சம்பந்தமான இனமனைத்து நீங்க, தன்னுடன் சேர்ந்திருந்த தத்துவமனைத்துமொடுங்க, கோபமும் கெட்டுப்போகத் திருவருளிற் கலந்திருப்பது எக்காலம். 85

அமையா மனதமையு மானந்த வீடுகண்டங்
கிமையாம னோக்கி யிருப்பதினி யெக்காலம்.

(பொ-ரை.) ஒருவழியிலும் ஒடுங்காத மனதை, திருவருளினலடக்கி சிவானந்த வீட்டினைத் தரிசித்து அவ்விடத்தில் இமை கொட்டாது வாழ்வது எக்காலம். 86

கூண்டுவிடுஞ்சீவன்மெள்ளக் கொட்டாவிகொண்டாற்போல்
மாண்டுவிடு முன்னேநான் மாண்டிருப்ப தெக்காலம்.

(பொ-ரை.) தேகத்தினைவிட்டு நீங்கத்தகுந்த சீவனானது மெதுவாக கொட்டாவி விடுதல்போலத் தேகத்தினை விட்டு நழுவுமுன் நான் பிரபஞ்ச சேஷ்டையினின்று நீங்கித் தன்னை மறந்திருப்பது எக்காலம். 87

ஊனிறைந்த காய முயிரிழந்து போகுமுன்னம்
நானிறந்து போகவினி நாள்வருவ தெக்காலம்.

(பொ-ரை.) மாமிசம் பொதிந்த உடலினின்றும் உயிர்வெளிப்பட்டுப்போகு முன்னர் நான் அகங்காரமற்ற வாழ்வடைவது எக்காலம். 88

கெட்டு விடுமாந்தர் கெர்விதங்கள் பேசிவந்து
சுட்டுவிடு முன்னென்னைச் சுட்டிருப்ப தெக்காலம்.

(பொ-ரை) மாயையால் அழியுமனிதர்கள் இறுமாப்பு வார்த்தைகள் பேசிக்கொண்டிருந்த எனதுடலைக் கொளுத்திவிடு முன்னர், பிரபஞ்சச் சூட்டினையொருத்து அந்தர் முகமாக என்னுட்குறித்து நோக்கிக் கொண்டிருப்பது எக்காலம். 89

தோலேணி வைத்தேறித் தூரநடந் தெய்க்காமல்
நூலேணி வைத்தேறி நோக்குவது மெக்காலம்.

(பொ-ரை.) தோலினலாகிய ஏணியினை ஆதாரமாகக் கொண்டு பலதேசஞ்சென்று இளைத்து, மெய்கண்ட சாஸ்திர நூல்களை ஆதாரமாகக்கற்று திருவருளைத் தரிசிப்பது எக்காலம். 90

வாயோடு கண்மூடி மயக்கமுற்று நில்லாமல்
தாயோடு கண்மூடி தழுவிநிற்ப தெக்காலம்.

(பொ-ரை.) வாயினையும் கண்களையும் மூடிக்கொண்டு மனமடங்காமத மயக்கத்தினையடைந்து வாழாமல், திருவருட்சத்தியுடன் அதீதமாகிய ஞானக்கண்ணைச்செலுத்தி திருவருளையனுபவித்து இருப்பது எக்காலம். 91

காசினியெ லாநடந்து காலோய்ந்து போகாமல்
வாசி தனிலேறி வருவதினி யெக்காலம்.

(பொ-ரை.) பிரபஞ்சமுழுது மலைந்து உண்மைதேருது உசுவாச நிசுவாச மென்கிற வாயுவாகிய குதிரையின் மேலமர்ந்து அதனைத் தன்வசப்படுத்தி வருவது எக்காலம். 92

ஒலிபடருங்குண்டலினை யுன்னியுணர் வாலெழுப்பிச்
சுழுமுனையின் றாள்திறந்து தூண்டுவது மெக்காலம்.

(பொ-ரை.) மூலாதாரத்தினின்று மெழும்பிப் பிரகாசத்துடனிருக்கும் சுத்தமாயாரூபமாகிய குண்டலி சத்தியைத் தியானித்து அறிவைக்கொண்டு உயரவெழச்செய்து அது சுழுமுனை வரையிற்செல்ல அங்கு மறைவு நீங்கித் திருவருள் தோன்றுவது எக்காலம். 93

இடைபிங் கலைநடுவே யியங்குஞ் சுழுமுனையில்
தடையறவே நின்று சலித்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை.) வலது மூக்கின் வழியாக வரும் இடைகலைக்கும் இடதுமூக்கின் வழியாகவரும் பிங்கலைக்கும் நடுவேயுள்ள சுழுமுனை நாடியில் சுவாச மிரண்டினையும்விடாது உள்ளேயிழுத்து அசைவற விருந்துகொண்டிருப்பது எக்காலம். 94

மூல நெருப்பைவிட்டு மூட்டி நிலா மண்டபத்தில்
பாலை யிறக்கியுண்டு பசியொழிவ தெக்காலம்.

(பொ-ரை.) மூலாதாரத்திலுள்ள அக்கினியினை எழுப்பி மேலே சந்திர மண்டலத்தில் தாக்கச்செய்து அந்நிலாவினிடத்தினின்றும் அமுதத்தினைப்பெய்யச்செய்து உண்டு, பசிதீர்ந்திருப்பது எக்காலம். 95

ஆகவெளிக்குள்ளே யடங்காப் புரவிசெல்ல
ஏகவெளியி லிருப்பதினி யெக்காலம்.

(பொ-ரை.) தேகத்தினுள்ளே இருதயாகாயத்தில் கட்டுக்கு அடங்காத வாசியென்னும் குதிரையானது வெளியேறாது உள்ளே செல்ல அப்போது அங்குத்தோன்றும் சிதம்பராகாயத்தில் சொரூபமாகி இருப்பது எக்காலம். 96

பஞ்சரித்துப் பேசும் பலகலைக்கெட் டாப்பொருளிற்
சஞ்சரித்து வாழ்ந்து தவம்பெறுவ தெக்காலம்.

(பொ-ரை.) மெய்யினை யுணர்த்தாது சொற்சாலமாக விஸ்தாரமாய்ப்பேசும் பலவகைப்பட்ட நூல்களுக்கும் எட்டாத உண்மைப் பொருளாகிய திருவருளினில் கலந்து வாழ்ந்திருக்க தவமடைவது எக்காலம். 97

மலமுஞ் சலமுமற்று மாயையற்று மானமற்று
நலமுங் குலமுமற்று நானிருப்ப தெக்காலம்.

(பொ-ரை.) உணவினை நீக்குதலினாலே மலமும் சலமும்நீங்கி, பிரபஞ்ச பற்றுவையாதிருத்தலினால் மாயையினின்று நீங்கி, நல்லதென்று சொல்லப்படுகின்ற கொண்டாட்டங்களும், சாதியபிமானமும் நீங்கி, நான் தனித்திருப்பது எக்காலம். 98

ஓடாம லோடி யுலகைவலம் வந்துசுற்றித்
தேடாம லென்னிடமாய்த் தெரிசிப்ப தெக்காலம்.

(பொ-ரை.) அஞ்ஞானமாகிய மனதுடன் பூமிமுழுதும் யாத்திரைசெய்த நான் அன்பின்வழியே யாத்திரைசெய்து சிவபரஞ்சுடரை சிதாகாயத்துள்ளே தரிசித்து ஆனந்தத்துடனிருப்பது எக்காலம்.

அஞ்ஞானம் விட்டே யருண்ஞானத் தெல்லைதொட்டு
மெஞ்ஞான வீடுபெற்று வெளிப்படுவ தெக்காலம்.

(பொ-ரை.) பிரபஞ்சப் பற்றாகிய அஞ்ஞானத்தினின்று நீங்கித், திருவருண்ஞானத்தினைப்பற்றி உண்மைஞானத்தினைப் பயப்பிக்கும் மோட்சத்தினையடைந்து சிவனடியனென வெளிவருவது எக்காலம்.

வெல்லுமட்டும் பார்த்து வெருளியெலாம் விட்டகன்று
செல்லுமட்டுஞ் சிந்தை செலுத்துவது மெக்காலம்.

(பொ-ரை.) தத்துவங்களைச் செயிக்கும் வரையில் செயித்துக் கோபமலைத்தினையும் நீங்கித் (திருவருளினை) எட்டும் வரையில் மனத்தினை செலுத்துவது எக்காலம். 101

மேலாம் பதந்தேடி மெய்ப்பொருளை யுள்ளிருத்தி
நாலாம் பலந்தேடி நான்பெறுவ தெக்காலம்.

(பொ-ரை.) மேன்பட்ட திருவருணிலையினை விசாரித்து உண்மைப் பொருளாகிய சிவபெருமானை மனத்திலிருத்திச் சிவசாயுச்சியத்தினை நாடி அதனை யானடைவது எக்காலம். 102

எண்ணாத தூரமெல்லா மெண்ணியெண்ணிப் பாராமல்
கண்ணாடிக் குள்ளொளிபோற் கண்டறிவ தெக்காலம்.

(பொ-ரை.) சிவபெருமானைத் தரிசித்தற்கேதுவான நினைவில், எண்ணாதபடி அறிவிற்கு அசுத்தமாக இருக்கும் நூல்களை நினைந்து நினைந்து வீணாகப்பாராமல், கண்ணாடிக்குள் ஒளியினைப் போல மனத்தின் கண்ணே சந்தேகமின்றித் தெரிந்துகொள்வது எக்காலம். 103

என்னை யறிந்துகொண்டே னெங்கோமா னோடிருக்குந்
தன்மை யறிந்து சமைந்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை.) ஆன்மா வின்னதெனத் தெரிந்துகொண்டு அதன்பின் எமது தலைவனாகிய சிவபெருமானுடன் இரண்டறக் கலந்திருக்கும் தன்மையினைத் தெரிந்து கொள்வது எக்காலம்.

ஆறுதா ரங்கடந்த வானந்தப் பேரொளியை
பேறுகக் கண்டு நான் பெற்றிருப்ப தெக்காலம்.

(பொ-ரை.) மூலாதாரமுதல் ஆஞ்ஞையீறாகவுள்ள ஆறு தாரங்களையுங் கடந்த சிவானந்த சொரூபமாயுள்ள அருட் பெருஞ் சோதியை நான் அடையும் பாக்கியமாகத் தரிசித்து அதனையடைந் திருப்பது எக்காலம். 105

ஆணவ மாயத்தா லழிந்துடலம் போகாமுன்
காணுதலா லின்பமுற்றுக் கண்டறிவ தெக்காலம்.

(பொ-ரை.) ஆணவமலத்தின் மயக்கத்தால் தேகம் அழிந்து விடு முன்னே சிவபெருமானைத் தரிசனம் செய்தலால் பேரின்ப மடையும் உண்மையை தெரிந்துகொள்வது எக்காலம். 106

மும்மலமுஞ் சேர்ந்து முளைத்தெழுந்த காயமிதை
நிர்மலமாய்க் கண்டுவினை நீங்கிருப்ப தெக்காலம்.

(பொ-ரை.) ஆணவாதி மலங்களின் சம்பந்தத்தால் காரியப் பட்டு, உருவாகிய இத்தேகத்திலுள்ள சீவகரணங்களைச் சிவகரணங் களாக்கிப் பரிசுத்தமாயிருக்கக்கண்டு செயலற்றிருப்ப தெக்காலம்.

முன்னை வினைகெடவே மூன்றுவகை காட்சியினால்
உன்னை வெளிப்படுத்தி யுறுவதினி யெக்காலம்.

(பொ-ரை.) பூர்வபிராரத்துவம் நீங்கவே தத்துவதரிசனம், ஆன்மதரிசனம், சிவதரிசனம் என மூவகைப்பட்ட காட்சிகளினால் தேவரீரை என்னிடத்து நின்றுதரிசித்தற் கேதுவாகி அடைவது எக்காலம். 108

(பொ-ரை.) இயங்கியற் பொருளாகிய அசைவு பதார்த்தங்களிலும், அசைவில்லாப் பதார்த்தங்களிலும் எள்ளுக்குள் எண்ணெயைப்போலத் தங்கியிருக்கும் வேதாந்தப்பொருளை அறிந்துகொள்வது எக்காலம். 157

ஊனாகி யூனி லுயிராகி யெவ்வுலகுந்
தானாகி நின்ற தனையறிவ தெக்காலம்.

(பொ-ரை.) காரியப்படுதலினால் உடலாகி, அறிவித்தலால் அவ்வுடலில் உயிராகி, எங்கும் வியாபித்தலால் உலகமனைத்துமாகியிருந்த முதல்வனையறிவது எக்காலம். 158

என்னைவிட்டு நீங்காம லென்னிடத்து நீயிருக்க
உன்னைவிட்டு நீங்கா தொருப்படுவ தெக்காலம்.

(பொ-ரை.) எக்காலத்தும் என்னைப்பிரியாது, அத்துவிதமாக என்னிடத்து, தேவரீர் கலந்திருக்க, அவ்வுண்மை தெரிந்து தேவரீரினின்றும் நீங்காமல் கலந்திருக்க எண்ணுவது எக்காலம்.

இன்னதென்று சொல்லவொண்ணா வெல்லையற்றவான்பொருள்
சொன்னதென்று நானறிந்து சொல்வதினி யெக்காலம்.[ளைச்

(பொ-ரை.) சொல்லாலே இத்தன்மையதென்று சொல்லக்கூடாத அளவற்ற உயர்பொருளையே ஆசாரியர் எனக்கு உபதேசித்தனரென்று தெரிந்துகொண்டு தியானிப்பது எக்காலம். 160

மனதைபொரு வில்லாக்கி வான்பொறியை நாணாக்கி
எனதறிவை யம்பாக்கி யெய்வதினி யெக்காலம்.

(பொ-ரை.) என்னுடைய மனதை வில்லாகவளைத்து அதற்குப்பெரிய இந்திரியத்தினை நாணாகப்பூட்டி அவ்வில்லினூடே என்னுடைய அறிவினை அம்பாக வைத்து ஆணவாதி மலங்களின்மேல் பிரயோகிப்பது எக்காலம். 161

லல்லாத கேள்வியைக் கேட்டிடுந் தீங்குக ளாயவுமற்
றெல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்கச்சி யேகம்பனே.

(பொ-ரை.) காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பர நாதனே! நான் வார்த்தைசொல்லும்போது சொற்களால் நேரிடுங் குற்றங்களையும், எண்ணும்போது மனத்தால் நேரிடுங் குற்றங்களையும், உடலாற் காரியங்களைச் செய்யும்போது விளைந்தகுற்றங்களையும், கண்ணால் விளைந்த குற்றங்களையும், பாபநூல்கள் படித்தலினால் வருங் குற்றங்களையும் மற்றும் பற்பலவகையால் நேரிடுங் குற்றங்களையும் பொறுத்தருளவேண்டும்.

(கு-ரை.) சொல், சிந்தனை தீவினை என்றதனால் மனம்வாக்குக் காயங்களால் நேரிடுங்குற்றங்கள். புண்ணியநூலென்றது பதிநூலினை, அல்லாத கேள்வியென்றது பசுபாசநூல்களை, குற்றங்கள் அறிந்தும் அறியாமலும் செய்வது ஆன்ம சுபாவமாகலின் பொறுத்தருள வேண்டுமென்றனர். (28)

முட்டற்ற மஞ்சளை யெண்ணெயிற் கூட்டி முகமினுக்கி
மெட்டிட்டுப் பொட்டிட்டுப் பித்தளைபோலே விளக்கியிட்டுப்
பட்டப் பகலில் வெளிமயக் கேசெயும் பாவையர்மே
லிட்டத்தை நீதவிர்ப் பாயிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை.) இறைவனே! காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பர நாதனே! நல்லமஞ்சளினை நல்லெண்ணெயுடன் கலந்து முகத்திற் பூசிக்கொண்டு மினுக்கி (கால்களில்) மோதிரந்தரித்து, (முகத்தில்) திலதமிட்டு, (காதில்) பித்தளைச் சுருளைத் [illegible]க்கிப்பூண்டு, பகற்காலத்திலேயே வெளிமயக்கத்தையுண்டாக்கும் [illegible]ர்கள்மேல் வைத்திருக்கும் ஆசையினைத் தேவரீர் தவிர்த்தருளவே[illegible]ம்.

(கு - ரை.) பெண்ணொருத்திகுரூபியாக விருந்திடினும் தன்னை யலங்கரித்துக்கொண்டு அவ்வேடத்தால் பகற்காலத்திலேயே விடநாயகர்களை மயக்குவதுண்மையின் அவர்பால் நேசம்வைத்தல் தகாதென்பர், இட்டத்தை நீதவிர்ப்பா யென்றனர். (29)

பிறந்துமண் மீதிற் பிணியே குடிகொண்டு பேரின்பத்தை
மறந்துசிற் றின்பத்தின் மேன்மய லாகிப்புன் மாதருக்குட்
பறந்துழன் றேதடு மாறிப்பொன் றேடியப் பாவையர்க்கீந்
திறந்திட வோபணித் தாயிறை வாகச்சி யேகம்பனே.

(பொ - ரை.) இறைவனே! காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! இவ்வுலகில்பிறந்து பலநோய்களையு மனுபவித்தும் பேரானந்தத்தை மறந்து, சிற்றின்பத்தில் மயக்குண்டு அற்பமாதர் கூட்டத்திற் சென்று திரிந்து தடுமாறி அவர்பொருட்டுத் திரவியம் சம்பாதித்து அம்மாதர்கட்குக்கொடுத்து (வீணாக) இறந்து விடத்தானோ கட்டளை யிட்டனை.

(கு - ரை.) பிறந்தநாள்முதலாக இருக்கும் நாள்வரையில் அனுபவமாக அனுபவித்தயாவும் சிறிதும் பிரயோசன முடையனவாகாமலும் இவற்றைக்கொண்டு அடையும்பலனு மொன்றுமில்லாதிருத்தலினாலும் இத்தன்மையவற்றில் காலத்தை வீணாகக் கழித்தேனென்பார், இறந்திடவோ பணித்தாய் என்றனர். (30)

பூதங்க ளற்றுப் பொறியற்றுச் சாரைம் புலன்களற்றுப்
பேதங் குணமற்றுப் பேராசை தானற்றுப் பின்முனற்றுக்

(போ-ரை.) நாயினுங் கடையனாகிய பிறப்பாகும் நான் எடுத்த சன்மமொழிய, மூங்கிலிலிருந்து உண்டாகிய அனல் அம்மூங்கிலினை அவ்வனல்மயமாக ஆக்கிவிடுவதுபோல என்னுடலிலிருந்து அருள் வெளிவந்து என்னுடலை அருண்மயமாக விளக்குவது எக்காலம். 170

சூரிய காந்திவெளி சூழ்ந்து பஞ்சை சுட்டதுபோ
லாரியன் றேற்றத் தருள்பெறுவ தெக்காலம்.

(பொ ரை.) சூரியனுடைய ஒளியானது கண்ணாடி மூலமாக பஞ்சினைக் கொளுத்தியதுபோல, ஆசாரியன் பார்வையால் உடல் மூலமாக மும்மலத்தினைக் கொளுத்தி அருள்பெறுவது எக்காலம்.

இரும்பிற் கனன்மூட்டி யிவ்வுருபோ யவ்வுருவாய்க்
கரும்பிற் சுவைரசத்தைக் கண்டறிவ தெக்காலம்.

(போ-ரை.) இரும்பினிடத்தில் அக்கினியைமூட்ட அவ்விரும்புருவமாறி அவ்வக்கினியுருவாய் விளங்குதல்போலத், திருவருளை உடலில் மூட்ட அவ்வுடலில் அத்திருவருளாய் விளங்கவும், கரும்பினிடத்தினின்றும் உண்டாகிற சுவையுடன் கூடிய இரசத்தினையொத்த சிவத்தினைத் தெரிந்துகொள்வது எக்காலம். 172

கருக்கொண்ட முட்டைதனைக் கடலாமை தானினைக்க
வுருக்கொண்ட வாறதுபோ னுனையடைவ தெக்காலம்.

(போ-ரை.) கடலாமையானது தன்னிடத்துற்பவித்த தன்னுடைய முட்டையினைக் கடற்கரையிலிட்டு மறுபடியும் ஒருக்கால் நினைக்க அம்முட்டை உருவுகொண்டதுபோல, ஆசாரியர் என்னை நினைக்க யான் அருளுருவமடைவது எக்காலம். 173

வீடுவிட்டுப் பாய்ந்து வெளியில்வரு வார்போல்
கூடுவிட்டுப் பாயுங் குறிப்பறிவ தெக்காலம்.

(பொ-ரை.) தாம் வாழ்கின்ற வீட்டினைவிட்டுநீங்கி வெளிவருவார்களைப்போல உடலைவிட்டு நீங்கி வெளிவரும் நாளில் குறிப்பினைத் தெரிந்து கொள்வது எக்காலம். 174

கடைந்த வெண்ணெய் மோரிற் கலவாத வாறதுபோல்
உடைந்து தமியேனு னுனைக்காண்ப தெக்காலம்.

(பொ-ரை.) தயிரினின்றும் கடைந்து எடுத்த வெண்ணெயானது மறுபடியும் மோரிற்கலவாதது போல, மலத்தினின்றும் வெளிப்பட்ட நான் மறுபடியும் அம்மலத்திற் கலவாதபடி தேவரீரைத் தரிசிப்பது எக்காலம். 175

இருளை வெளிவிழுங்கி யேகவுருக் கொண்டாற்போல்
அருளை விழுக்குடிரு ளகன்றுநிற்ப தெக்காலம்.

(பொ-ரை.) பூதவிருளினைச் சூரியவொளி கெடுத்து ஒளிமயமாக விருந்ததுபோல் அருளினால் ஆணவவிருள்கெட அவ்வருள் மயமாக நிற்பது எக்காலம். 176

மின்னெழுந்து மின்னடுங்கி விண்ணிலுறைந் தாற்போல்
எண்ணுணின்ற தென்னுள்ளே யானறிவ தெக்காலம்.

(பொ-ரை.) மின்னலானது ஆகாயத்தினின்றும் உண்டாகி மருபடியும் ஆகாயத்திலொடுங்கித் தங்கியதுபோல, என்னிடத்து மறைந்து கிடக்கும் அருளானது என்னிடத்தினின்றும் வெளிப்பட்டு மறுபடியும் என்னிடம் தங்குவது எக்காலம். 177

கண்ட புனற்குடத்திற் கதிரொளிகள் பாய்ந்தாற்போல்
கொண்ட சொரூபமதைக் கூறறிவ தெக்காலம்.

(பொ-ரை.) உடைவுள்ள சலநிறைந்த பாண்டங்கள் தோறும் சூரியவொளி பிரகாசித்தாற்போல, பிரபஞ்ச பதார்த்தங்கள்தோறும் மாயை கலந்திருக்கும் மாயாசொரூபத்தின் கூறுபாட்டினை (என்னினின்றும் பிரித்தறிவது) எக்காலம். 178

பூணுகின்ற பொன்னணிந்தாற் பொன்சுமக்கு மோவுடலைக்
காணுகின்ற வென்கருத்திற் கண்டறிவ தெக்காலம்.

(பொ-ரை.) ஆபரணங்களாகப் பொன்னினைப்பூண்டால் அப்பொன் உடலைச் சுமக்குமோ சுமக்காது, பொன்னினை உடலே சுமக்கும் (அதுபோல) திருவருளினைப்பெறுகின்ற என்மனத்தில் திருவருள் என்னைத் தாங்காமல் நான் திருவருளைத் தாங்குமாறு தெரிந்து கொள்வது எக்காலம். 179

செம்பிற் களிம்புபோற் சிவத்தை விழுங்குமிக
வெம்பினின்ற மும்மலத்தை வேறுசெய்வ தெக்காலம்.

(பொ-ரை.) செம்பினைக் களிம்பு மறைத்துக்கொண்டிருப்பதுபோலவும், சிவமானது அஞ்ஞானக்களிம்பால் மூடப்பட்டிருப்பதுபோலவும், என்னை மறைத்து துன்பத்தைதரும் மும்மலங்களை என்னிடத்தினின்றும் பிரித்துவைப்பது எக்காலம். 180

ஆவியுங் காயமும்போ லாத்துமத்து நின்றதனைப்
பாவி யறிந்துமனம் பற்றிநிற்ப தெக்காலம்.

(பொ-ரை.) உயிரும் உடலும் அபேதமாக கலந்திருத்தல் போலத் (தேவரீர்)என் ஆன்மாவினிடத்து அபேதமாக அத்துவிதத் தன்மையிற் கலந்திருத்தலைப் பாவியாகிய நான் தெரிந்து மனப் பற்றுகொண்டு வாழ்வது எக்காலம். 181

ஊமைக் கனாக்கண் டுரைக்கறியா வின்பமதை
நாமறிந்து கொள்வதற்கு நாள்வருவ தெக்காலம்.

(பொ-ரை.) ஒரு ஊமையானவன் ஒரு உத்தமமான கனவினைக்கண்டு (அதனைப் பிறருக்குச்) சொல்லவகையற்று தானே சந்தோஷிக்கும் இன்பத்தினையொக்க நாமறிந்துகொண்டு வெளியிடக்கூடாத சுகத்தையனுபவித்தற்குப் பாகம்வருவது எக்காலம்.

சாகாத சிவனடியைத் தப்பாதா மெப்போதும்
போகா வுடலகன்று போவதென்ப தெக்காலம்.

(போ-ரை.) சிவபெருமான் றிருவடியை எக்காலத்தும் தியானித்திருக்கும் அடியார்கள் அழியாத உடலுடனே (பூமியினின்றும் நீங்கி) அழியாதபேரின்பத்தினை அடைந்திருக்கும் தன்மையினை அடியேனறிவது எக்காலம்.

நிட்டைத் தனைவிட்டு நினைவறிவு தப்பிவிட்டு
வெட்ட வெளியில் விரவிநிற்ப தெக்காலம்.

(போ-ரை.) உபாசனை பலிக்கும்வரையில் நிஷ்டைகூடிப் பின் அந்நிஷ்டையினைமறந்து (முன்னிலைச்சுட்டாக) எண்ணும் எண்ணத்தையும் நீங்கிச், சிதாகாயத்தல் கலந்து நிற்பது எக்காலம். 184

வெட்டவெளி தன்னில் விளைந்தசிவம் பாசத்தை
திட்டமுடன் கண்டு தெளிவதினி யெக்காலம்.

(போ-ரை.) திருவருள் வியாபகத்திலிருந்துகொண்டு எனக்கு அநாதியாக வுண்டாகிய ஆணவமலத்தின் உண்மையினைத் தெரிந்து அதனினின்று நீங்கியிருப்பது எக்காலம். 185

எங்கும் பரவடிவா யென்வடிவு நின்வடிவாய்க்
கங்குல்பக லின்றியுனைக் கண்டிருப்ப தெக்காலம்.

(போ-ரை.) எங்கும் சிவமயமாயிருக்கும் கடவுளே, என்னுடைய உடலானது சிவசொரூபமாய், சகலகேவலமற்று உன்னைத் தரிசித்துக்கொண்டிருப்பது எக்காலம். 186

உண்டதுவு மாதருடன் கூடிச் சேர்ந்தின்பங்
கண்டதுவு நீயெனவே கண்டுகொள்வ தெக்காலம்.

(போ-ரை.) பிரபஞ்சபோகமனுபவித்ததும், பெண்களுடன் கலந்து சிற்றின்பத்தினை நுகர்ந்ததும், என்னுடைய கன்மத்திற்குத் (தகுந்தபடி) தேவரீரே கூட்டிவைத்தீரென்னும் (உண்மையினைத்) தெரிந்துகொள்வது எக்காலம். 187

ஈமென்று கேட்டதுவு மென்னுள்ளே நின்றதுவும்
ஓமென்று சொன்னதுவு முற்றறிவ தெக்காலம்.

(பொ-ரை.) (நான் நிஷ்டைகூடியிருந்தகாலத்தில்) என்காதினிடத்து ஈம் என்ற நாதமுண்டானதுவும், பின்ன ரென்னுள்ளத்தில் குண்டலிசத்தி நிலையுற்றதுவும், அது ஓங்காரத்துடன் சப்தித்ததும் (ஆகிய விஷயங்களின் உண்மையை) நிலையுறச் சிந்தித்தறிவது எக்காலம். 188

சத்தம் பிறந்தவிடந் தன்மயமாய் நின்றவிடஞ்
சித்தம் பிறந்தவிடந் தேர்ந்தறிவ தெக்காலம்.

(பொ-ரை.) நாதோற்பத்திக்குக் காரணமாகவுள்ள மூலாதாரத்தையும், திருவருள்மயமாக நின்ற அவசரத்தையும், மனோவிருத்திக்கு ஆதாரத்தையும் விசாரித்தறிவது எக்காலம். 189

போக்கும் வரவும் புறம்புள்ளு மாகிநின்றும்
தாக்கு மொருபொருளைச் சந்திப்ப தெக்காலம்.

(பொ-ரை.) சகல வடிவினையுற்ற ஆன்மாக்களின் அனுக்கிரக நிமித்தமாக காட்சிகொடுத்தருளுதலும், மறைந்தருளுதலும், செய்து, நிஷ்களவடிவினையுற்று எங்கும்வியாபகமாகி பிரபஞ்சத்தில் அதிஷ்டித்துக்கொண்டிருக்கும் ஒப்பற்ற வஸ்துவைத் தரிசிப்பது எக்காலம். 190

நானெனவு நீயெனவு நாமிரண்டு மற்றொன்றும்
நீயெனவே சிந்தைதனி னேர்படுவ தெக்காலம்.

(பொ-ரை.) சுதந்தரமாக நானென்னு மொருவனிருப்பதாகவும் எனக்கு அன்னியமாக நீயொருவனிருப்பதாகவும் சொல்லும் அப்பேதத்தன்மை யிரண்டும் நீக்கி, என்னிடத்தில் அபேதமில்லாமல் பொருந்தியிருப்பது தேவரீர் எனவே என்மனதில் உதயமாவது எக்காலம். 191

அறிவையறி வாலறிந்தே யறிவு மறிவுதனில்
பிறிவுபட நில்லாமல் பிடிப்பதினி யெக்காலம்.

(பொ-ரை.) ஆன்ம அறிவை திருவருளை முன்னிட்ட அறிவினால் தெரிந்து அங்ஙனமறிந்த அறிவினில் வேறுபட்டு நில்லாமல் அத்திருவருண்மயமாக பொருந்தியிருப்பது எக்காலம். 192

நீடும் புவனமெல்லாம் நிறைந்துசிந் தூரமதாய்
ஆடும் திருக்கூத்தை யறிவதினி யெக்காலம்.

(பொ-ரை.) புவனமனைத்தும் வியாபித்து அப்புவனமுழுவதும் டஸ்பமாகும்படி தகித்து (சர்வசங்காரகாலத்தில்) நடனம்செய்யும் (உண்மையினைத்) தெரிந்துகொள்வது எக்காலம். 193

தித்தியென்ற கூத்துத் திருச்சிலம்பி னோசைகளும்
பத்தியுட னேகேட்டுப் பணிவதினி யெக்காலம்.

(பொ-ரை) தித்தியென்றதாள ஒத்துடன் நடிக்கும் திருக்கூத்தில் திருவடியிலுண்டாகின்ற (அழகிய) வேதச்சிலம்பின் சப்தங்களையும் பக்தியுடனே அடியேன்கேட்டுத் தில்லைச்சிற்றம்பலத்திலே வணங்குவது எக்காலம். 194

நயனத் திடைவெளிபோய் நண்ணும் பரவெளியில்
சயனத் திருந்து தலைப்படுவ தெக்காலம்.

(பொ-ரை) இரண்டுநேத்திரங்கட்கும் மத்தியிலுள்ள கோதண்டத்தானத்தில் தியானங்கூடி யிருந்து அங்குத்தோன்றும் சிதாகாய வெளியில் திருவருட் சுழுத்திகூடி உன்னுடனே வாழ்தல் எக்காலம். 195

அருவி மலைநடுவே யாயிரக்கால் மண்டபத்தில்
திருவிளையா டல்கண்டு தெரிசிப்ப தெக்காலம்.

(போ-ரை) அமிர்த தாரையாகிய அருவியோடிவருகின்ற சந்திரமண்டல மேருவிலுள்ள அநேகமாயிரமான நரம்புகளாகிய கால்களாலே தாங்கப்பெற்ற பிரமாந்திர மண்டபத்தில் தெய்வத் திருவிளையாட்டினைத் தரிசிப்பது எக்காலம். 196

மீனைமிக வுண்டுநக்கி விக்கிநின்ற கொக்கதுபோல்
தேனைமிக வுண்டுநக்கி தெவிட்டிநிற்ப தெக்காலம்

(போ - ரை.) மீன்களை அதிகமாகபிடித்துண்டு திகட்டிநின்ற கொக்கினைப்போல, ஞானனர்தத்தேனைத் திருப்தியாகவுண்டு ஏப்பமிட்டு இருப்பது எக்காலம். 197

பொல்லாத காயமதைப் போட்டு விடுக்குமுன்னே
கல்லாவின் பால்கறப்பக் கற்பதனி யெக்காலம்.

(போ-ரை.) தீவினையாலாகிய உடலினைப் பூமியிலே கிடத்தி விடுமுன்னமே (அவ்வுடலின் கண்ணேயுள்ள) கற்பசுவாகிய (இருளுண்ட மனதுக்கு (ஞானப்) பாலினை உண்பித்து அஞ்ஞானத்தை நீக்கி, சாதனங்களை தெரிந்து கொள்ளுதல் எக்காலம். 198

வெட்ட வெளிக்குள்ளே விளங்கு சதாசிவத்தைக்
கிட்ட வரத்தேடக் கிருபைசெய்வ தெக்காலம்.

(போ-ரை.) சிதாகாய வெளியிலே பிரகாசித்துக் கொண்டிருக்கும் (அருவுருவாகிய) சதாசிவமூர்த்தியினைச் சமீபத்தில் தரிசனம் செய்யும்படி குருவருளைப்பெற்று அதனால் சிவத்தன்மையடைவது எக்காலம். 199

போரறிவி லேமனதை போராம லேயிருத்தி
ஓரறிவி லென்னாளு மூன்றிநிற்ப தெக்காலம்.

(போ-ரை.)பேரறிவினாலே மனத்தினை அசையாதபடி நிறுத்தி, மனமும் அறிவும் ஒருமைப்பட்டு நிலைபெற்றிருப்பது எக்காலம்.

அத்துவிதம் போலுமென்ற னாத்துமத்தி னுள்ளிருந்து
முத்திதர நின்ற முறையறிவ தெக்காலம்.

(போ-ரை.) ஒன்று இரண்டென்னப் பிரித்தறிதற்கு வாராத தாகிய அத்துவிதத் தன்மைபோல, என்னுடைய ஆன்மாவின் கண்ணே கலந்திருந்து மோட்சத்தை அடைய பரிபக்குவ காலத் தினை நோக்கிக் கொண்டிருக்கிற தன்மையினை யறிந்து கொள்வது எக்காலம். 201

நாணின்ற பாசமதி னுணிருந்து மாளாமல்
நீநின்ற கோலமதில் நிறைவிநிற்ப தெக்காலம்.

(போ-ரை) நாணழுந்திக்கிடக்கிற மலத்திலேயே நான் தங்கி யிருந்து அழியாமல், தேவரீர் எங்கும் வியாபகமாயுள்ள திருவருள் மயக்கத்தில் கலந்து இருப்பது எக்காலம். 202

எள்ளுங் கரும்பு மெழுமலருங் காயமும்போ
லுள்ளும் புறம்புநின்ற தூற்றறிவ தெக்காலம்.

(போ-ரை.) எள்ளில் எண்ணெயைப் போலவும், கரும்பில் இரசம்போலவும், புட்பிக்கின்ற புட்பத்தில் வாசனைபோலவும், உட லில் உயிரைப்போலவும் எனது அகத்தும் புறத்தும் கலந்ததன்மை யினை தெரிந்துகொள்ளுதல் எக்காலம். 203

அன்னம் புனலைப்பகுத் தமிர்தத்தை யுண்டதுபோ
லென்னைவகுத் துன்னை யினிக்காண்ப தெக்காலம்.

(போ-ரை.) அன்னபட்சியானது நீரினின்றும் பாலைப்பிரித்து உண்ணுமாறுபோல (நானே நீயென்னும்) பசு ஞானத்தினின்று நீங்கி அடியேனை (ஆண்டானாகிய) உனக்குவேறாக அடிமையெனக் கண்ட பதிஞானத்தால் தேவரீரைத் தரிசிப்பது எக்காலம்.

அந்தரத்தி னீர்பூத் தலர்ந்தெழுந்த தாமரைபோல்
சிந்தைவைத் தூக்கொண்டு தெரிசிப்ப தெக்காலம்.

(பொ-ரை.) ஆகாய கங்கையிலிருந்து பூத்து மலர்ந்த தாமரைப் புட்பத்தினைப்போல, திருவருட்பெருக்கத்தில் மனம்நாட்டி, இருதயதாமரை மலரக்கண்டு தரிசிப்பது எக்காலம். 205

பிறப்பு மிறப்புமற்றுப் பேச்சுமற்று மூச்சுமற்று
மறப்பு நினைப்புமற்று மாண்டிருப்ப தெக்காலம்.

(பொ-ரை.) பிறப்பதற்கும் இறப்பதற்கும் மேதுவாயுள்ள சுகதுக்கங்களையொழித்து, பிராணவாயுவை விளங்கவொட்டாமல் தடுத்துக்கொண்டு, சகல கேவலங்கடந்து மவுனமோடிருந்து தற்போதங்கொண்டிருப்பது எக்காலம். 206

மன்னும் பரவொளியை மனவெளியி லடைத்தறிவை
என்னுமொரு நினைவை யெழுப்பிநிற்ப தெக்காலம்.

(பொ-ரை.) நிலைபெற்ற சிதாகாய வொளியினை மனத்திலடக்கி அறிவினைப் (பிரபஞ்சமுகமாகப்) பலவழியிலும் விடாது நிறுத்தி திருவருளையே சிந்திக்கும் ஒரு நினைவிலேயே தூண்டிநிற்பது எக்காலம். 207

ஆசைகொண்ட மாத ரடைகனவு நீக்கியுன்மேல்
ஓசைகொண்டு நானு மொடுங்குவது மெக்காலம்.

(பொ-ரை.) மோகத்தினை யுண்டாக்கும் அழகிய மாதர்களைக் கனவினும் நினையாதபடி நீக்கித், தேவரீரின்மீது மனதைச்செலுத்தி அடியேனும் ஒடுங்கி யிருப்பது எக்காலம். 208

தன்னுயிரை கொண்டு தான்றிரிந்த வாறதுபோல்
உன்னுயிரைக் கொண்டிங் கொடுங்குவது மெக்காலம்.

(பொ-ரை.) தனது ஆன்மசுதந்தரத்தினால் உலகத்திற் சஞ்சரித்து வாழுதல்போல, தேவரீர் திருவருளினை ஆதாரமாகக்கொண்டு இவ்வுலகில் சீவன்முத்தனாகத் திரிந்துவருதல் எக்காலம்.

சேற்றிற் கிளைநாட்டுந் திடமா முடலையினிக்
காற்றிலுழல் சூத்திரமாய்க் காண்பதினி யெக்காலம்.

(பொ-ரை.) சேற்றினிடத்தே ஒரு விருட்சத்தின் கிளையினை நடுதலினால் பலங்கொண்டிராததுபோல, நிலையில்லா தேகத்தினை யினிமேல் நம்பாமல் மெய்ஞ்ஞானமாகிய சிவத்தில் சஞ்சரிக்கின்ற காற்றாடியென உண்மையையறிவது எக்காலம். (210)

என்வசமுங் கெட்டிங் கிருந்தவச மும்மழிந்து
தன்வசமுங் கெட்டருளைச் சார்ந்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை.) உடலின் சுதந்தரத்தையும் நீங்கி, உலகின் சுதந்தரமும்நீங்கி, ஆன்மாவின் சுதந்தரமும் நீங்கித், திருவருளின்சுதந்தரத்தில் வாழ்ந்திருப்பது எக்காலம். 211

தன்னை மறந்து தலத்து நிலைமறந்து
கன்ம மறந்து கெதிபெறுவ தெக்காலம்.

(பொ-ரை.) உடலின்செய்கைகளையுமிழந்து, பிரபஞ்சகாரியங்களையுமிழந்து, கன்மத்தால் விளையும் போகங்களையுமிழந்து முத்தியை அடைவது எக்காலம். 212

என்னையென்னி லேமறைந்தே யிருந்தபதி யும்மறந்து
தன்னையுந்தா னேமறந்து தனித்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை.) நானென்ற உடலினை மறந்து, இதுகாறும் வாழ்ந்துவந்த பூமியையுமறந்து, ஆன்மாவாகிய தன்னையும் தானே மறந்து தனித்து வாழ்வது எக்காலம். 213

தன்னையுந்தா னேமறந்து தலைவாசற் றாழ்போட்டே
உன்னை நினைந்துள்ளே யுறங்குவது மெக்காலம்.

(பொ-ரை.) ஆன்மாவாகிய தன்னையும் ஆன்மா காரணமாகவேமறந்து, பிரபஞ்சவாசனை நுழைதற்கேதுவாகவுள்ள மனவாயிலையடைத்துத் தேவரீரை தியானித்துக்கொண்டு சிவயோகநித்திரையிலிருப்பது எக்காலம். 214

இணை பிரிந்த போதலறி யின்பமுறு மன்றிலைப்போல்
துணைபிரிந்தபோ தருளால் தொடர்ந்துகொள்வ தெக்காலம்.

(பொ-ரை.) உற்றதுணையாக விருந்த ஆண் அன்றிலும் பெண் அன்றிலும் ஒன்றைவிட்டு ஒன்று நீங்கியபோது கூச்சலிட்டுப் பழையபடி கூடியிருக்கும் அன்றிற்பட்சிகளைப்போல, தனக்கு உற்ற உதவியாகவிருந்த ஞானாசிரியரைப் பிரிய நேரிட்டபோது மனம் வருந்தி தேடிக்கண்டு ஆனந்தமுற்றிருப்பது எக்காலம். 115

ஆட்டமொன்று மில்லாம லசைவுசற்றுங் காணாமல்
தேட்டமற்ற வான்பொருளைத் தேடுவது மெக்காலம்.

(பொ-ரை.) சஞ்சல மென்பதுஞ் சிறிதுமில்லாமல், சோர்வென்பதுஞ் சிறிதுந்தோன்றாமல், கவலையற்ற உயர்ந்த திருவருளின் றன்மையினை ஆராய்வது எக்காலம். 216

முன்னைவினை யாலறிவு முற்றாமல் பின்மறைந்தால்
அன்னைதனைத் தேடி யமுதுண்ப தெக்காலம்.

(பொ-ரை.) பூர்வ ஜென்மாந்தர வினையின்படி அறிவு அழுந்தாமல் ஒருக்கால் திரோதான சத்தியால்மறைந்தாலும், திருவருட் சத்தியினைநாடி ஞானமிர்தம் உண்பது எக்காலம். 117

கள்ளுண்ட வன்போற் களிதருமா னந்தமதாற்
றள்ளுண்டு நின்றாடித் தடைபடுவ தெக்காலம்.

(பொ-ரை.) பிரபஞ்சமாயையை நீக்கி ஞானக்கள்ளினைக் குடித்தவர்போலச் சந்தோஷத்தினை அடைந்து சிவானந்தத்தால் அசைதல் பெற்று பிரமானந்தக் கூத்தாடித் திருவருளைப் பெற்று ஆனந்தத்தை யடைவது எக்காலம். 218

தானென்ற வாணவமுந் தத்துவமுங் கெட்டொழிந்தே
ஏனென்ற பேச்சுமிலா திலங்குவ தெக்காலம்.

(பொ-ரை.) தான் என்று செருக்குற்ற ஆணவமலமும், தத்துவங்களின் காரியப்பாடும் நீங்க, ஏன் என்கின்ற சொல்லுமில்லாதபடி மவுனமுற்றிருப்பது எக்காலம். 219

நானவனைக் காண்பதெல்லா ஞானவிழி யாலறிந்து
தானவனை நின்று சரணடைவ தெக்காலம்.

(பொ-ரை.) (ஆன்மாவாகிய) நான் முதல்வனுடைய (கருணையால்) எல்லாவற்றையும் காணுவதென்னும் உண்மையினை யெல்லாம் ஞானேந்திரியத்தாற்றெளிந்து, (சிவோகம்பாவனையில்) முதல்வனுகேயிருக்கும் திருவடியினை யடைவது எக்காலம்.

தானந்த மில்லாத தற்பரத்தி னாடுருவி
ஆநந்தங் கண்டே யமர்ந்திருப்ப தெக்காலம்.

(போ-ரை.) ஆன்மாவாகிய நான் முடிவில்லாத சிவபெருமானின் (திருவருளில்) கலந்து சிவானந்த மனுபவித்து பொருந்தியிருப்பது எக்காலம். 221

உற்ற வெளிதனிலே உற்றுப்பார்த் தந்தரத்தே
மற்ற மறமாய்கை மாள்வதினி யெக்காலம்.

(போ-ரை.) பொருந்திய சிதாகாயவெளியிலே ஞானநோக்காற் பார்த்து அவ்வெளியிலே (அம்மயமாயிருந்து) வேறுபட்ட மாய்கையானது நீங்குவது எக்காலம். 222

ஏடலர்ந்த பங்கயமு மிருகருணை நேத்திரமுந்
தோடணிந்த குண்டலமுந் தோன்றுவது மெக்காலம்.

(போ-ரை.) புறவிதழ் அவிழப்பெற்ற தாமரையினைப்போன்ற திருமுகமும், கருணை பொழியா நின்ற நேத்திரங்களும், வளையந் தரித்த குண்டலங்களுடன் கூடிய (செவிகளும்) உடைய தேவரீர் எனக்கு தரிசனம் கொடுத்தருளுவது எக்காலம்.

ஐயாறு மாறு மகன்றுவெறு வெளியில்
மையிருளில் நின்றமன மாள்வதினி யெக்காலம்.

(போ-ரை.) முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து சிதாகாயத்தில் (கலந்து) ஆணவ மயக்கத்திலிருந்த மனம் ஒடுங்குவது எக்காலம். 224

காட்டு மருண்ஞானக் கடலிலன்பு கப்பல்விட்டு
மூட்டுங் கருணைக்கடலின் மூழ்குவது மெக்காலம்.

(போ-ரை) ஆசாரிய மூர்த்தி காட்டும் திருவருளாகிய ஞான சமுத்திரத்தில் அன்பாகிய கப்பலினை நடத்தி கருணைசமுத்திரத்தில் மூழ்கியிருப்பது எக்காலம். 225

நானாரோ நீயாரோ நன்றாம் பரமான
தானாரோ வென்றுணர்ந்து தவமுடிப்ப தெக்காலம்.

(பொ-ரை.) நான் என்னும் தன்மைச் சுட்டினுக்கும், நீயென்னு முன்னிலைச் சுட்டினுக்கும், நல்ல ஞானபரவெளியாக விருக்கிற தான் என்னும் படர்க்கைச் சுட்டிற்கும், இலக்கு எவரோவென ஆராய்ந்து தவத்தினை முடிப்பது எக்காலம். 226

எவரெவர்க ளெப்படிகண் டெந்தப் படிநினைத்தார்
அவரவர்க் கப்படிநின் றானென்ப தெக்காலம்.

(பொ-ரை.) ஆன்மாக்கள் தங்கள் கன்மத்திற்குத் தக்கபடி எவ்வெவர்கள் எந்தவிதமாகத் தரிசிக்க எண்ணினரோ, அவ்வவர்கட்கு அந்த விதமாக காட்சிகொடுத்தருளும் முதல்வனது உண்மையை அறிவது எக்காலம். 227

உற்றுற்றுப் பார்க்க வொளிதருமா னந்தமதை
நெற்றிக்கு நேர்கண்டு நிலைப்பதினி யெக்காலம்.

(பொ-ரை.) இலக்காக மனத்தைவைத்து நோக்க அவ்விடத்துத் தோன்றும் அருட்பெருஞ் சோதியினை இருபுருவங்கட்கு மத்தியிலுள்ள கோதண்ட தானத்தில் நேரே தரிசித்து நிலைத்திடுவது எக்காலம். 228

விளங்குகின்ற தாரகையை வெய்யோன் மறைத்தாற்போல்
களங்கமற வுன்காட்சி கண்டறிவ தெக்காலம்.

(பொ-ரை.) பிரகாசிக்கின்ற நட்சத்திரக் கூட்டங்கள் சூரியனது கிரணங்களால் மறைந்ததுபோல, அடியேனுடைய மாயா சம்பந்தமான காரியங்களெல்லாமறைய ஞானசூரியனைத் தரிசிப்பது எக்காலம். 229

என்னையே நானறியே னிந்தவண்ணஞ் சொன்னதெல்லா
முன்னையோர் கைக்கொள்ள முன்பணிவ தெக்காலம்.

(போ-ரை.) ஆன்மாவாகிய தன்னையே இன்ன விலக்கண முடையதென வறியேன் என்று சொன்ன யாவும் சிவஞானிகள் சம்மதப்பட்டதை சாஸ்திரத்தால் தெரிந்துகொண்டு சிவபெருமான் சந்நிதானத்திலே பணிவது எக்காலம். 230

ஐஞ்சு கரத்தானை யடியிணையைப் போற்றிசெய்து
நெஞ்சிற் பொருந்தி நிலைபெறுவ தெக்காலம்.

(போ-ரை.) ஐந்து திருக்கரங்களுடன் கூடிய விநாயகக்கடவுளின் திருவடிகளைத் தோத்திரஞ்செய்து அவர் திருவுருவத்தினை மனதிற் பதித்து திருவருளினையடைவது எக்காலம்.

மெஞ்ஞானப் புலம்பல் இடையூறின்றி முடிதற்பொருட்டும் முடிந்ததின் பொருட்டும் முதலிலும் கடையிலும் முத்தபிள்ளையார் வணக்கம் கூறினாாயினர். 231

இம்மெய்ஞ்ஞானப் புலம்பலுக்கு அறுபான் மும்மை நாயன்மார்களிலொருவராகிய வாயிலார் நாயனார் பாரம்பரையில் வந்தவரும், சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சைவபிரவர்த்தகாசாரியரும், மதுரைத் தமிழ்ச்சங்கத்து மகாவித்துவான்களிலொருவரும், சென்னை மெய்கண்ட சந்தானசபை அக்கிராசனாதிபதியுமாகிய சித்தாந்தசரபம். அஷ்டாவதானம் பூவை-கலியாணசுந்தரர் இயற்றியது.

ஞானார்த்ததீபவுரையும் முற்றியது.

